உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில :

கதிராமங்கலம்

ஸ்ரீ வனதுர்க்காதேவி

# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 3 மாசி பகுதி 5


## முன்னோட்டம்

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் அருள்பழுத்த கனிச்சுவைப் பகுதியில் பண்டார மும்மணிக்கோவை பதினொன்றாம் பாடலுக்குக் கார்த்திகை இதழிலிருந்து விளக்கம் அருளி வருகிறார்கள். 'முற்படுமாயை' எனத் தொடங்கும் அப்பாடல் 39 அடிகளைக் கொண்டபாடல். அப்பாடலை 7 பகுதிகளாகப் பிரிக்கலாம். இது வரை மூன்று பகுதிகளுக்கு ஸ்ரீ லஸ்ரீ சுவாமிகள் அவர்கள் விளக்கம் அருளியுள்ளார்கள். இந்தஇதழில்நான்காம் பகுதிக்கு விளக்கம் அருளுகிறார்கள். விவசாயம் செழிக்க ஒரு நல்ல உத்தியை இந்தப் பகுதியில் அறிவித்தருளியுள்ளார்கள். அது என்ன என்று படித்துப்பார்த்துத் தெரிந்து கொள்ளுங்களேன்.

வெளிவராத இலக்கியங்களை வெளியிடும் பகுதியில் இராமேஸ்வரம் பிரபந்தத் திரட்டிலிருந்து பருவத வர்த்தனி பேரிலாசிரியம் இந்த இதழுடன் நிறைவு பெறுகிறது. சென்னை திருவான்மியூர் டாக்டர் உ.வே.சா. நூலகத்திலிருந்து வந்துள்ள மேலும் சில நூல்கள் தொடர்ந்து வெளியிடப் பெறும்.

சாஸ்திர நூல் விளக்கப் பகுதியில் உமாபதி சிவாசாரியாரின் போற்றிப் பஃறொடை வெண்பாவுக்கு திரு. கு. சுந்தரமூர்த்தி விளக்கம் தருகிறார்.

தலயாத்திரைப் பகுதியில் வித்துவான் திரு. பொன். முருகையன் அவர்கள் தல விளக்கம் தருகிறார்.

இலக்கியச் சோலை பகுதியில் வாகீச கலாநிதி திரு. கி. வ. ஜ. அவர்கள் திருவாரூர் நான்மணிமாலை இலக்கியப் பாடலுக்கு விளக்கம் அளித்து வருகிறார். இந்த இதழில் 15 ம் பாடலுக்குச் சுவையான தெளிவான விளக்கம் அளித்துள்ளார்.

வழக்கறிஞர் திரு. இராமலிங்கம் அவர்களின் சைவசித்தாந்தம் என்ற கட்டுரையும், திரு. தா. குருசாமி அவர்களின் எம்பிரான் சம்பந்தன் என்ற கட்டுரையும், பேரறிஞர் திரு. மு. அ. அவர்களின் சித்தாந்த சாஸ்திரங்கள் தொடரும், திரு. கண்ணபிரானின் சிறுகதையும், டாக்டர் திரு. சடையப்பன் அவர்களின் இதமான வாழ்வுக்கு எளிய வழிகளும் மற்றும் வழக்கமான அம்சங்களும் இந்த இதழுக்கு அணி செய்கின்றன.

— டி. ஆர்.



# மதுரையில் மகா சிவராத்திரி தேவார விழா

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21 - ஆவது அதிபர்

## ஸ்ரீ லஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களின் ஆணையின் வண்ணம் நடத்தப்பெறுவது

## ரௌத்திரி ஆண்டு மாசி மீ 21-ஆம் நாள் 4-3-81 புதன்கிழமை

## மாசி மகா சிவராத்திரி

நீல மாமிடற் றால வாயிலான், பால தாயினர் ஞாலம் ஆள்வரே.
ஆட லேற்றினன் கூடலாலவாய், பாடியே மனம் நாடிவாழ்மினே.
— சம்பந்தர்

மாகத்து அபரதிர யோதசியோ டேபதினொன்கு
ஏசவா ரத்தின் இசையின்,
அற்றைநிசி யிற்சிவன்தாள் அர்ச்சிக்கப் பாசவிதம்
அற்(று) அமலன் பாதம் அடைவர் - மாசி
மகாசிவராத்திரி கல்பம்

திருமுறை வாணர்கள் :

சங்கீதபூஷணம், கலைமாமணி
தருமபுரம் திரு. P. சாமிநாத முதலியார், சென்னை

தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்
திரு. விசுவலிங்கம், சபாபதி சகோதரர்கள் திருவாவடுதுறை,
திரு. நா. குருசாமி தேசிகர், மதுரை.

தேவார இசைமணி
திரு. ப. இராமசந்திர ஓதுவார், விருத்தாசலம்.

தேவாரமணி திரு. S. சைலப்ப ஓதுவார்,
திருமுறைப்பணி, மதுரை.

திரு. T. R. கிருஷ்ணன், பிடில், கும்பகோணம்
திரு. கோ. வெங்கட்ராமன் மிருதங்கம், திருப்பனந்தாள்

ஆணைப்படி,
முத்து. மெய்கண்டதேவன்,
மானேசர், ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள்.

---

குறிப்பு :- மதுரை, ஸ்ரீ மீனாட்சியம்மன் திருமுன்னிலையில் இரவு 8- மணிக்குத் தொடங்கிச் சிவமே நிலவும் ஆடி நான்கு வீதிகளில் இரவு முழுவதும் திருமுறைவாணர்கள் திருமுறை ஓதிக் காலை 6- மணிக்கு ஸ்ரீ மீனாட்சியம்மன் திருமுன்னிலையில் நிறைவுசெய்வார்கள்.

---

## இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்

### வயிற்றிலுள்ள கிருமிகள் நீங்க

தினசரி வெங்காயத்தை பச்சையாக உரித்து சாப்பிட்டு வந்தால் வயிற்றிலுள்ள கிருமிகள் இறந்து விடும்.

Dr. N. சடையப்பன், S.M.P.

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச்சுவை

## ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

விவசாயத்திற்கு நீர் முக்கியம். இதை இப்படிச் சொல்ல லாம் 'மும்மடங்கு முக்கியம்' என்று சொல்லலாம். அதனால் தான் அருளாளராகிய ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் 'முற்படு மாயை' எனத் தொடங்கும் பண்டார மும்மணிக்கோவைப் பாடலில் - ஞான உழவு பற்றிக் கூறிய இப்பாடலில் நீர்பற்றி நான்கு இடங்களில் மூன்று விதமாகக் குறித்தருளியுள்ளார்கள். ஆறும் அடியில்

'ஊழ் எனப்பட்ட தாழ்புனற் படுகர்'

என்கிறார். பத்தாம் அடியில்

'போகம் என்னும் புதுப்புனல்'

என்கிறார். இங்கே பதிமூன்று பதினான்காம் அடிகளில்

'இதத்துடன் இகிதம் என்னும்இரண் டூற்றில்
புதுப்புனல்'

என்கிறார். இருபத்தினான்காம் அடியில்

'கருணை நீர்'

என்பார். இந்த இடங்களில் போகம், விருப்பு வெறுப்பு, அருள் ஆகியவற்றை நீர் என்கிறார். நீர் மூன்று வகைப்படும். ஆற்று நீர், ஊற்று நீர், மழை நீர் என

ஆற்று நீர் – போகம். ஆற்றுநீர் மலையிலிருந்து வரும். போகமும் - துய்ப்பும் முற் பிறவியிலிருந்து மேலே இருப்பவன் துய்ப்பிக்க - ஊட்ட வரும் ஆற்றுநீர் பெருகும், வற்றும்; துய்ப்பும் பெருகும், வற்றும். இருகரை அணைப்பால் நெறிச் செல்வது ஆற்றுநீர். பயம் பக்தி என்னும் இருகரை அணைப் பால் நல்வழிப்படுவது போகம். இப்படிப் பலவகையிலேயும் போகத்திற்கும் ஆற்று நீருக்கும் ஒப்புமை உண்டு.

விருப்பு வெறுப்பு என்பன ஊற்று நீர் தோண்டத் தோண்ட ஊற்றுப் பெருகும். சிந்திக்கச் சிந்திக்க விருப்பு வெறுப்புக்கள் பெருகும். ஊற்று எல்லா இடங்களிலும் கிடைப்பதில்லை. உலகசிந்தனை அற்ற ஞானியர்களிடத்தில் விருப்பு வெறுப்பு அமைவதில்லை.

அருள் என்பது மழை நீர். மழை வேண்டியவர் வேண்டாதவர் என்று பார்த்துப் பொழிவதில்லை. அருளும் தொடர்பு அற்றவரிடத்தும் செல்லுவது கார்காலத்தில் மழை நீர் அதிகம் இறை அருள்பக்குவாத்மாக்களுக்கு அதிகம். மழை 'முன்னி அவள்சுரக்கும் இன்னருளே என்னப் பொழியாய்' என்ற திருவெம்பாவைத் தொடரையும் இந்த இடத்தில் நாம் சிந்திக்க வேண்டும்.

விவசாயத்தில் உழவனுக்கு மேலும் ஒரு கடமை இருக்கிறது. நாற்று நட்டுப் பிறகு அதற்கு வேண்டிய வளர்ச்சி நிலைக்குக் கடமைகள் செய்தபின் அறுவடைக்குத் தயாராகும் இடைக்காலத்தில் உழவன் வாளா இருக்கக் கூடாது. ஆற்றில் வரும் நீரை ஏரிகளில் தேக்கிக் கொள்ள வேண்டும் ஆற்றில் நீர் வரவில்லை என்றால் ஊற்றுக்களை வெட்டி நீரைப் பெருக்கிப் பெருகும் நீரை ஏரிகளில் தேக்கிக் கொள்ள வேண்டும் இது என்ன சாத்தியமான காரியந்தானா என்று கேட்கலாம். ஏரிக்குப் புறம்பான ஓரிடத்தில் ஊற்று வெட்டுங்கள் எனச் சொல்லவில்லையே ஏரியிலேயே அல்லது குளத்திலேயே ஊற்று வெட்டலாம். ஒரு கல்லில் இருமாங்காய் அடிப்பது என்பார்களே அதைப் போலச் சொல்கிறார். ஏரியில் ஊற்று வெட்டி நீர் சேர்ந்ததாகவும் ஆகிறது; நீர்வற்றிய காலத்தில் ஏரியை ஆழப் படுத்தியதாகவும் ஆகிறது.

உழவன் தனக்குப் பட்டா உள்ள நிலத்தில் மட்டும்தான் தனக்கு கடமை இருக்கிறது என்ற நினைக்கக் கூடாது. தன் வயலுக்கு நீர் தரும் ஏரி குளம், ஆறு, வாய்க்கால் ஆகிய வற்றிலும் தன்கடமை இருக்கிறது என உணர வேண்டும். அப்படிப்பட்ட உணர்வு வந்து விட்டால் நாம் அரசாசங்கத்தையே அதிகம் குறை சொல்ல வேண்டிய அவசியம் ஏற்படாது.

விருப்பு வெறுப்பு என்பன ஊற்றுக்கள். ஆறு அத்துவாக்கள் ஏரிகள். ஆறு அத்துவாக்களாவன மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை. அத்துவா என்பது வழி உயிர்கள் கடவுளை அடைய இந்த ஆறு வழிகளையும் கடந்து செல்ல வேண்டும். மந்திரம் - தொடர்; பதம் - சொல்; வன்னம்- எழுத்து; புவனம் - உலகம்; தத்துவம் - முத்திக்குரிய கட்டு; கலை - பக்குவத்திற்குப் படியாவது.

அத்துவாக்கள் என்ற நீர் நிலைகளில் இதம்-இகிதம் அதாவது விரும்பு வெறுப்பு என்ற ஊற்று நீரைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். இந்தச் சேகரம் அடுத்துச் செய்யவிருக்கும் ஞானப் பயிர் விளைச்சலுக்கு உயிர்ப் பயிர்கள் துய்க்க ஞானசிரியன் செய்து கொள்ளும் ஏற்பாடு

இந்த ஏற்பாட்டின் பிற்பாடு அறுவடை; விளைந்தவற்றை அறுத்தல், களத்தில் போரடித்தல், கண்டு முதல் காணல். எல்லா பயிருமா தேறியிருக்கும்! எல்லா உயிருமா தேறி யிருக்கும்!

பதர் ஆன பயிரில் சிறு வைக்கோலே மிச்சம் ஞானம் விளையாத உயிர் சடலத்தோடு மிஞ்சும். இப்படி உழவு செய்யும் உழவரே மாசிலாமணிதேசிகர்.

இதத்துடன் இகிதம் எனும்இரண்டு ஊற்றில்
புதுப்புனல் பெருக்கிப் புறம்புஅலைத்து ஓட
வார்புனல் அதனை மந்திரம் முதலா
ஓர்அறு வகைப்படும் ஏரிகள் நிரப்பி
விளைவன விளைவன அறுத்து ஆங்கு
ஒருகளம் செய்யும் உழவன் ஆகி
மாநிலம் புரக்கும் மாசி லாமணி
ஞான சம்பந்த ஞான தேசிக!

[இதம் - விருப்பு; இகிதம் - வெறுப்பு; புறம்பு – ஊற்றின் வெளியே; வார்புனல் – இழியும் நீர்; மாநிலம் - உலகம்; புரக்கும் - காக்கும்]

— சிவ சிவ

# ஆலய பூஜை படிக்காசு நிதிக்கு

## நன்கொடையளித்த அன்பர்கள் விபரம்

4—1—81 வரை கூடுதல் ரூ.4887-00

1. மலேசியா திரு. M. K. முத்துராமலிங்கம் பிள்ளை அவர்கள் 1256-00
2. திருவல்லிக்கேணி திரு. க. சுப்பிரமணியஅய்யர் 365-00
3. திருப்பனந்தாள் கல்லூரிப் பேராசிரியர் திரு. தா. ம. வெள்ளைவாரணம் அவர்கள் 101-00
4. குமாரபாளையம் திரு. S. சுந்தரராஜன் அவர்கள் 101-00
5. கோவை. திரு. N. பழநியப்பன் அவர்கள் 100-00
6. சீர்காழி. திரு. D. கல்யாணராமன் அவர்கள் 51-00
7. சென்னை திரு. V. N. ஆறுமுக முதலியார் அவர்கள் 51-00
8. சென்னை திருமதி V. A. மீனு அவர்கள் 51-00
9. செல்வி M. A. நிரஞ்சனு அவர்கள் 51-00
10. சென்னை செல்வி M. A காந்தாமணி அவர்கள் 51-00
11. சென்னை செல்வி M. A. சுமத்ரா அவர்கள் 51-00
12. எலந்தூர் திரு. K சுப்பையா பிள்ளை அவர்கள் 51-00
13. ஸ்ரீ காசிமடம் திரு. V. நாகலிங்கம் பிள்ளை அவர்கள் 51-00
14. சேலம் அட்வகேட் திரு. S. ராமலிங்கம் அவர்கள் 50-00
15. ஸ்ரீ காசிமடம் திரு. T. P. சுப்பிரமணியம் அவர்கள் 25-00
16. ,, ,, திரு. M. கோவிந்தசாமி அவர்கள் 25-00
17. மைலாப்பூர் திரு. சுந்தரேசம் பிள்ளை அவர்கள் 25-00
18. மதுரை திரு. சுந்தரேசம் பிள்ளை அவர்கள் 25-00
19. மதுரை திரு. T. குருசாமி தேசிகர் அவர்கள் 25-00
20. விருத்தாசலம் திரு. சண்முகம் பிள்ளை அவர்கள் 25-00
21. விருத்தாசலம் காருடல் சண்முகம் பிள்ளை அவர்கள் 25-00

22. உக்கரை கைலாசம் அவர்கள் 25-00
23. ஆற்பாக்கம் திரு. திருவேங்கட முதலியார்
அவர்கள் 25-00
24. சென்னை திரு பார்த்திப பாரதி அவர்கள் 20-00
25. மதுரை திரு. நமசிவாயம் அவர்கள் 20-00
26. ஸ்ரீ காசிமடம் திரு. M சுப்பையா முதலியார்
அவர்கள் 13-00
27. ,, ,, திரு. முருகு. சவாமிநாதன் அவர்கள் 13-00
28. கோவை திரு சாவி. தம்பிராசு அவர்கள் 12-50
29. திருலோக்கி திரு. R. மாணிக்கம் அவர்கள் 11-00
30. பம்பாய் திரு. R. நாராயணமூர்த்தி அவர்கள் 11-00
31. பம்பாய் திரு. R. இராஜகோபால் அவர்கள் 11-00
32. தஞ்சை T. S. முத்துக்குமாரசுவாமி முதலியார்
அவர்கள் 11-00
33. சிதம்பரநாதபுரம் திரு. R. சுவாமிநாதன்
அவர்கள் 11-00
34, பம்பாய் திரு. R, அனந்த ராமன் அவர்கள் 10-00
35. வாலாஜா பாத் T. M காசிலிங்கம் அவர்கள் 10-00
36. ஸ்ரீ காசிமடம் திரு. P. சீனிவாசன் அவர்கள் 10-00
37. ,, ,, திரு. K.M. குமாரசாமி அவர்கள் 10-00
38. ,, ,, திரு. ச. விஜயரங்கன் அவர்கள் 10-00
39. ,, ,, திரு. R. சீனிவாசய்யர் அவர்கள் 10-00
40. ,, ,, திரு. T.S. பரதப்பிள்ளை அவர்கள் 10-00
41. மதுரை திரு. யாழ்திரவியம் அவர்கள் 10-00
42. நரசிங்கன்பேட்டை திரு. G. S. முத்துசாமி
அவர்கள் 7-00
43. மதுரை திரு. ச. நமசிவாயம் அவர்கள் 5-00
44. திருலோக்கி திரு. T.S. பாலசுப்ரமணியன்
அவர்கள் 5-00
45. ,, ,, திரு. P. ரெங்கராஜ் அவர்கள் 5-00
46 .திருமாகறல் திருமையூர் முத்தம்மாள் அவர்கள் 5-00
47. திருமாகறல் திரு. நடராஜன் அவர்கள் 5-00

48. திருமாகறல் திரு. M.K, கன்னியப்ப முதலியர் அவர்கள் 5-00
49. திருமாகறல் திரு. V. புருஷோத்தமன் அவர்கள் 5-00
50. திருமாகறல் திரு. S. இராமகிருஷ்ண முதலியார் அவர்கள் 5-00
51. பெரும்பாக்கம் திருமதி. அன்னபூரணி அம்மாள் 5-00
52. பெரும்பாக்கம் திரு. கோபால் பிள்ளை அவர்கள் 5-00
53. " " திரு. B. முத்தையன் அவர்கள் 2-00
54. " " திரு. T.V. சுவாமிநாதன் அவர்கள் 2-00
55. " " திரு. B. சீனிவாசன் அவர்கள் 2-00
56. மதுரை ஆறுமுகத்தம்மாள் அவர்கள் 1-00

3—2—81 வரை கூடுதல் ரூ. 7780-50



## நமக்கு நல்லது

உங்கள் ஜன்ம நட்சத்திரம் வரும் நாளில் ஆண்டுதோறும் உங்கள் பெயரில் ஒரு புண்ணியகாரியம் நடைபெறவேண்டும். உங்கள்பெயர் முகவரி பிறந்த மாதம் (தமிழில்), நட்சத்திரம் ஆகிய குறிப்புக்களுடன் ரூ. 110-க்கான காசோலையும் அனுப்புங்கள். ஆண்டுதோறும், அந்தமாதம் அந்தநாளில் தஞ்சை மாவட்டம், கதிராமங்கலம் ஸ்ரீவந துர்க்கா பரமேஸ்வரிக்கு அபிஷேக அர்ச்சனை செய்து பிரசாதம் உங்கள முகவரிக்கு அனுப்பப்பெறும். உங்களுக்கும் ஒரு முக்கியமான கடமையுண்டு. உங்கள் முகவரி மாற்றங்களை (மாற்றங்கள் இருந்தால்) அவ்வப்போது தெரிவிக்க வேண்டும். இந்தத் திட்டத்தில் நீங்கள் பங்குகொள்ள விரும்பும் விருப்பத்தின்வேகம் உங்கள் அதிர்ஷ்டத்தின் வேகத்தைப்பொருததது தொகையும்விவரங்களும்அனுப்பவேண்டிய

முகவரி:- ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள்,
அதிபர், ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் - 612 504.



## 29. பிறர் காரியங்களில் தலையிடுவதைப்பற்றி எச்சரிக்கை

### தமிழாக்கம்: கோ, வன்மீகநாதன்

உலகம் முழுவதையும் படையெடுத்து வென்று
தம்இஷ்டப்படி அதை ஆக்க (மாற்ற) எண்ணுபவர்கள்
இருக்கிறார்கள்.
ஆனால் அவர்களால் வெற்றி காணமுடியாதென்று நான்
அறிவேன்.
ஏனெனில் உலகம் கடவுளின் சொந்த கலம்
மனிதர்கள் தலையிட்டு அதை தம்மிச்சைபடி மாற்ற முடியாது.
எவனொருவன் அதை அவ்வண்ணம் மாற்றி
அமைக்கின்றானோ அவன் அதைக் கெடுக்கிறான்.
எவனொருவன் அதைக் கைப்பற்றி வைத்திருக்கிறானோ
அவன் அதை இழக்கிறான்.
ஏனெனில் சில விஷயங்கள் முன்னேறுகின்றன,
சில விஷயங்கள் பின் தங்கி வருகின்றன;
சில சாதகமாய் அமைகின்றன,
சில பிரதி கூலமாய் அமைகின்றன;
சில வலிமையுடையன வாயிருக்கின்றன,
சில பல வீனமாயிருக்கின்றன,
சில (தடுக்கி) விழுந்துவிடலாம்.
இக்காரணத்தால் தான் மெய்ஞ்ஞானி மிதமிஞ்சுவதைத்
தவிக்க்கிறான்,
டாம்பீகமாகச் செலவு செய்தலைத் தவிர்க்கிறான்
பெருமைப் படுவதைத் தவிர்க்கின்றான்.

---

சீன மொழியிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர் ''29, 30, 31 ஆம் அதிகாரங்களில் மனிதன் தலையிடுவது, சண்டை சச்சரவு இவற்றை விலக்கும்படி அளிக்கப்பட்டுள்ள போதனையை மனிதன் மறப்பதால் எழும் போர்களின் மீது லௌட்ஸியின் எண்ணங்கள் செல்கின்றன'' என்கிறார். ''இந்த அதிகாரங்களில் போரைப் பற்றி உலகில் கூறப்பட்டுள்ள கருத்துக்களில் மிகச் சிறந்த வற்றை இந்த அதிகாரங்களில் லௌட்ஸி கூறுகிறார்'' என்கிறார்.

# புண்ணியம் ஓரிடம், புகழ் ஓரிடம்

கி. வா. ஜகந்நாதன்

ஒரு செல்வர் வீட்டில் அந்தச் செல்வருடைய மனைவி விருந்தினர்களுக்கு உணவு அளித்து மகிழ்வாள். ஏழைகளுக்கு உபகாரம் செய்வாள். அதனால் அந்த வீட்டுக்கே ஒரு பெருமை உண்டாயிற்று. ''தர்மப் பிரபு வீடு அது'' என்று சொல்லி ஊர்க்காரர்கள் பாராட்டினார்கள்.

ஒரு நாள் அப்படிச் சிலர் அந்த வீட்டையும் அந்தப் பிரபுவையும் பாராட்டிப் பேசிக் கொண்டிருந்தனர். கேட்டுக் கொண்டிருந்தவர்களில் ஒருவர்; ''உங்களுக்கு உண்மை தெரியுமோ?'' என்று கேட்டார்.

''என்ன உண்மை?'' என்று, பாராட்டியவர்களில் ஒருவர் வினவினார்.

''அந்த வீட்டையும் அந்தப் பணக்காரர்களையும் பாராட்டுகிறீர்களே; உண்மையில் அந்தப் பாராட்டுக்கு உரியவர் வேறு ஒருவர்'' என்றார் அவர்.

''வேறு யார் ஐயா அவர்?'' என்று முன்னவர் கேட்டார்

''அந்தப் பெருமைக் கெல்லாம் காரணம் அந்த வீட்டு அம்மாள் தான்'' அவளே உண்மையான தர்மம் செய்கிறவள்'' என்று அவர் விளக்கினார்.

இந்த முறையில் குமர குருபர முனிவர் ஒருபாடலைப் பாடுகிறார்; தியாகர் என்றால் கொடையாளி என்றுபொருள். ''தியாகர் தியாகர் என்று திருவாரூர்ப் பெருமானைச் சொல்கிறார்களே! அவர் என்ன தியாகம் செய்கிறார். அவர் பிச்சை எடுக்கிறவர் அல்லவா? அவரைத் தியாகர் என்று சொல்லலாமா? ஆனாலும் சொல்கிறோம். உண்மையாகத் தியாகம் செய்பவள் அம்பிகைதான். முப்பத்திரண்டு அறங்களையும் அவளே வளர்க்கிறாள் ஆனால் பெயர் என்னவோ அவளுடைய கணவருக்குத்தான் இருக்கிறது. புண்ணியம் ஓரிடம், புகழ் ஓரிடமாக இருக்கிறது என்று அந்தப் பாட்டில் சொல்கிறார். அதைப் பார்ப்போம்''

தியாகேசர் அபயவரதகரங்களை உடையவர். வலக்கை அஞ்சேல் என்று நிமிர்ந்து காட்டுகிறது; அதை அபயக்கை என்பார்கள், இடக்கை கீழ்நோக்கி அவருடைய திருவடியைச் சுட்டிக்காட்டி, ''இங்கே அருள் கிடைக்கும்'' என்று குறிப்பிக்கிறது. அதை

வரதக்கரம் என்பார்கள், இப்படிக் காட்டும் இரண்டு குறிப்புகளையும் அபய முத்திரை வரத முத்திரை என்பார்கள். தம்மை அடைந்தவர்களுக்கு வரம்தந்து இன்பம் தருவதை அந்த வரதத் திருக்கரம் காட்டுகிறது. அது எந்தக்கரம்? இடக்கரம்.

வரம்தந் தருள வரதம்வைத் தால்என்?
வரதம்இடக்
கரம்தந்த தால்

என்று தொடங்குகிறார் குமரகுருபரர், ''அந்தக்கை யாருடையது? இடப்பாகத்தில் எழுந்தருளியிருக்கும் அம்பிகையின் கையல்லவா? அது இவருடைய கை அல்லவே?''

இவர் கைஅது அன்றே?

''இவர்கை வலக்கை. அதைப் பாருங்கள், அதில் அவர் பிச்சைப் பாத்திரத்தை ஏந்திக் கொண்டிருக்கிறார். பிரமனுடைய கபாலத்தையே பிச்சை வாங்கும் கலமாக வைத்துக் கொண்டிருக்கிறார். ஊரூர் தோறும் பிச்சை எடுக்கிறவர் என்பது எல்லோருக்கும் தெரியுமே! ஏதோ அரை குறை மனசோடா அவர் பிச்சை எடுக்கிறார்? அந்தக் காரியத்தை அவர் மனமார விரும்பியே செய்கிறார்''.

பலி காதலித்துச்
சிரந்தந்த செங்கைக் கமலேசர்

''இவ்வாறு பிச்சைஎடுப்பதையே தொழிலாகக் கொண்டு எப்போதும் தம் கையிலே பிச்சைப் பாத்திரத்தையும் ஏந்தியவராய் உள்ள பெருமானுக்குத் தியாகர் என்ற நாமம் வந்தது பொருந்துமா? பொருந்துமோ, பொருந்தாதோ, அவருக்கு அந்தப் பெயர் நிலைத்துவிட்டது.''

கமலேசர் நாமம் தியாகர் என்பது.

எப்படி அந்தப் பெயர் அவருக்கு வந்தது? உண்மையில் அம்பிகை தான் அறத்தைச் செய்பவள். முப்பத்திரண்டு அறங்களையும் வளர்ப்பவள். அந்தப் பெருமாட்டிதான் வளர்க்கிறாள். பல வற்றையும் தியாகம் செய்கிறாள். அதைவிடப் பெரியது, அதனால் வரும் புகழையும் தியாகம்செய்து விட்டாள். 'அவரைத் தியாகர் என்று சொல்லாதீர்கள்; நான் தான் கொடுக்கிறேன்' என்று தடுப்பாளா நன்மங்கையர் தாமே நல்லசெயல்களையெல்லாம்செய்து விட்டுப் புகழையும் பயனையும் தம் கணவர்கள் அடையும்படி செய்வார்கள். இதுவே பாரதநாட்டுப் பெண்களின் சிறந்தபண்பு. இதை அம்பிகை செய்து காட்டுகிறாள்.

இதை எண்ணி, ''அரத்தால் கூர்மையாக்கிய வாளைப் போன்ற கண்ணையுடைய அம்பிகை தானே அறங்களை வளர்த்து பெயரை மட்டும் தியாகப் பெருமானுக்குக் கொடுத்துவிட்டாள்'' என்கிறார் முனிவர்.

நாமம் தியாகர் என்பது
அரந்தந்த வாள்விழி யாள்தந்த
தாங்கொல்
அறம்வளர்த்தே.

'பிச்சை யேற்றுத் திரியும் கண வருடைய மானத்தைக் காப் பாற்றி, அறம்செய்து அவரையே தர்மப்பிரபு தியாகமூர்த்தி என்று யாவரும் சொல்லும்படி வைத்திருக்கிறுள் அம்பிகை. அவருக்குச் சொந்தமானதுதான் அருள்தரும் வரதக்கரம்' என்று கூறுகிறுர் அவர்.

வரம்தந் தருள வரதம்வைத் தால் என்?
வரதம் இடக்
கரம்தந்த தால்; இவள் கைஅது அன்:
றேபலி காதலித்துச்
சிரம்தந்த செங்கைக் கமலேசர் நாமம்
தியாகர்என்பது
அரம்தந்த வாள்விழி யாள்தந்த
தாங்கொல்,
அறம்வளர்த்தே!

° திருவாரூரில் எழுந்தருளி யிருக்கும் கமலேசர் தம்மைப் பணியும் அடியவர்களுக்கு வேண்டிய வரங்களை வழங்கும் பொருட்டு வரத முத்திரையை வைத்தால் என்ன? அந்த வரத முத்திரையை இடக்கரம் காட்டு கிறது; அது இவர் கையல்லவே! பிச்சை எடுப்பதைவிடும்பிப் பிரம கபாலமாகிய பிச்சைப் பாத் திரத்தை வைத்திருக்கும் சிவந்த கையையுடைய கமலேசருடைய திருநாமமாகிய தியாகர் என்பது, அரம் அராவிக் கூர்மையாக்கிய வாளைப் போன்ற திருவிழியை யுடைய அம்பிகை முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்துத் தந்த தாகும். •

[வரதம் - வரத முத்திரை என்=என்ன பொருளுடையது; என்ன பயன் என்றும் சொல்ல லாம், தந்ததால்; ஆல்; அசை அது இவர் கை அன்று; ஏ- தேற்றம், பலி-பிச்சை. சிரம் தந்த - பிரம கபாலத்தைக் கொண்ட. என்பது - என்று சொல்வது, அரம்தந்த - அரம் அராவிக் கூர்மையாக்கித் தந்த. விழியாள்தந்தது ஆம். கொல்; அசை. வாள் விழியாள் அறம் வளர்த்துத் தந்தது [நாமமாகிய தியாகர் என்பது.]°

'இவருக்குப் பிச்சை எடுப்பவர் என்ற சிறுமையே யன்றி, இயல் பாகப் பெருமை இல்லை. ஆனல் தியாகர் என்ற திருநாமம் அம்பிகையால் கிடைத்தது என் பது புலப்படச் சொன்னுர்.

இது திருவாரூர் நான்மணி மாலையில் வரும் 15-ஆவது பாட்டு.



# பருவத வர்த்தினியம்மன் பேரிலாசிரியம்

10, சரணகமலத்துகளி லெழுபரம வணுவினுற்
சதகோடி பங்கினென்றுற்
சதுமுகப் பிரமனுயிர் பல்கோடி யண்டங்கள்
சர்வசர மும்படைப்பாம்
அரணமெழு கடலாக அரவணையின் மீதுதுயி
லரிமுறைமை யாலளிப்பாம்
அரனுமொடு நிமிஷத்தில் விபூதி யாக்கிமே
லணிவனுன் பெருமையெளிதோ
கிரண நீநவமணிக் கிரீட வேணி
விஞ்சைக ளெந்திரமாந்திரி
கோணி கீதபாணி அங்குச பாணிநயன
கிருபா சமுத்திரபாணி
வரநளின மலர்மச்சங் குதிகொள் வாவிவளர்
தேவை நகரின்வாழ்வே
மருமலர்த் துன்னுகுழ லனநடைக் கன்னியெனு
மலைவளர்ப் பெண்ணமுதமே.

11. நீர்கொண்ட மேகத்தை நிகரான குழலழகு
நிலவொழுகு நகையினழகும்
நித்திலச் சுட்டிதிகழ் நெற்றியழ குங்கருணை
நிறையுமொடு விழியினழகும்
சீர்கொண்ட கும்பத் தனத்தழகு மின்னிணைசொல்
சிற்றிடையி னழகுமிலகுஞ்
சேவடி யிழைகும்யான் சிந்திப்ப தன்றியே
செய்தவம் வேறுமுளதோ
தார்கொண்ட தேவைநகர வளர்மனேன் மணிசித்தர்
தபோதனர் வாழ்த்துநாமி
தவபூமி சிவகாமி தனநேமி அபிராமி
சவுந்தரிய மாதர்சாமி
வார்கொண்ட கனதன தெய்வயானைப் பெண்ணும்
வள்ளியும் வணங்கு மாமி

மடுமலர்த் துன்னு குழலன நடைக்கன் னியெனு
மலைவளர்ப் பெண்ணமுதமே.

12. மேடத்தின் மருமகனு ரிடபத்தின் ஊர்தியார்
மிதுனத்தின் சூழ்வேண்டினர்
விரிசுடர்க் கற்கடக சிங்கத்தி னுரிவையார்
மேன்மையறி யாக்கன்னியார்
தேடத்து லாம்பதியர் சேதவிருச் சிகரியார்
சிகரமே ருத்தனுவினர்
செவியின்மக ரக்குழையா டக்கும்ப முனிதேர
நடஞ்செய்யும் தியாகேசனர்
நாடொப்பி லாமீன நயனிநீ லிதபாலி
நவகோணி சக்கரபாணி
நரபாலி கரசூலி தவவேணி குணசீலி
நவலோர் பாக்கியசாலி
மாடத்தின் முகில்கள்தவழ் தேவைநகர் ராமீசர்
மருவுமயி லேயருள் செய்வாய்
மடுமலர்த் துன்னுகுழ லனநடைக் கன்னியெனு
மலைவளர்ப் பெண்ணமுதமே

—❋❋—

# "சித்தாந்த சாத்திரங்கள்"

## மு. அருணுசலம்

''இப்புத்தகத்திலடங்கிய நான்கு சாத்திரங்களைத்த விர மற்றைய சாத்திரங்களும் விரைவில் அச்சிடப்படும்'' என்பது அதிலுள்ள விளம்பரம். மற்றவை பின் அச்சிடப்பட்டனவா என்பது தெரியவில்லை. முதல் புத்தகத்தின் முனைப்பேட்டில் பின்வருமாறு கண்டிருந்தது

''உ சிவமயம். திருச்சிற்றம்பலம், திருவெண்ணெ நல்லூரைத் திருப்பதியாகக்கொண்டு எழுந்தருளிய பொல்லாப் பிள்ளையார் திருவாய் மலர்ந்தருளிய சிவஞான போதச் சூர்ணைக் கொத்தும், மெய் கண்ட சிவாசாரியார் திருவாய் மலர்ந்தருளிய சிவஞான போத மூலமும், ஆரணி மகா-௱-ஸ்ரீ காசி நாராயணசாமி முதலியாரவர்களும் ஷி ஊர் மகா-௱-ஸ்ரீ சந்நியாசி குப்பு செட்டியாரவர்களும் பலகால் வேண்டிக் கொண்டபடி திரிசிரபுரம் வித்துவான் மதுரை நாயகம் பிள்ளையவர்களால் பிழையறப் பரிசோதித்து சென்னைப் பட்டணம் லேசியம் பிரசில் அச்சிடப்பட்டன. அட்சய ஞு ஐப்பசி மீ (Registered Copy right)''. இதிலிருந்து பல செய்திகளை நாம் அறியலாம், ''பலகால் வேண்டினர்கள், பிழையறப் பரிசோதித்தார்'', பிழையற என்றதற்கேற்ப, சிவஞான போத அச்சில் இரண்டே பிழைகள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

மேலும், இவர் இச்சாத்திரங்களை உபகாரம் செய்தாரைப் பற்றி இவர் கூறும் சொற்களும் காணத்தக்கன:

இச்சைவசித்தாந்த சாத்திரங்களை அச்சிடுவதற்கு உபகாரஞ் செய்த நமது இஷ்டர் பலருள் முக்கியராகிய மகா-௱-ஸ்ரீ ஆரணி சந்நியாசி குப்புசாமி செட்டியார் அவர்கள் அறிவு ஒழுக்கங்களில் சிறந்தவராய். எச்சமயங்களிலும் சிறந்த நமது சற்சமயமாகிய சைவ சமயப்பயிர், புறச்சமயக்களைகளான் மூடப்பட்டு இருப்பதை உணர்ந்து, அக்களைகளை வேரோடகழ்ந்து எறியத் தம்மாற் கூடிய விடா முயற்சி செய்ய வேண்டும் என்ற எண்ணங் கொண்டு இருப்பதனுல் அவரை நாம் புகழ்வதுபோலப் புகழாதவர் உலகத்தில் யாவர்?''.

## சித்தாந்த சாத்திரம் 14.

சித்தாந்த சாத்திரங்கள் ஒரு தொகுப்பாக ஓலைச்சுவடிகளில் காணப்படுவது உண்மை. ஆனால் அங்கு எங்கும், இவையே சித்தாந்த சாத்திரங்கள் என்று எந்த ஏடும் அல்லது எந்தப் பாடலும் வரையறை செய்து சொல்லவில்லை. ''உந்தி களிறு'' என்ற பாடல் சித்தாந்த சாத்திரங்களைக் குறிப்பிடுவது என்பது எல்லோரும் நன்கறிந்தது. ஆனால் இது எந்தப்பழைய ஏட்டிலும் காணப்படவில்லை. முதல் முதல் அச்சிட்ட மதுரை நாயகம் பிள்ளை தாம் எழுதிய நூல் வரலாற்றின் இறுதியில், நூல்சிறப்பு, கருத்து, பாடல் தொகை என்பவற்றைப் பிறபாடல்களால் விளக்கிய பின் ''சைவ சித்தாந்த சாத்திரம் பதினன்கினையும் உணர்த்தும் செய்யுள்'' என்று முன் குறிப்பிட்ட வெண்பா -வைத்தருகிறார்.

> உந்தி களிறே[1] உயிர்போதம் சித்தியார்
> பிந்திருபா உண்மை பிரகாசம் - வந்தஅருள்
> பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சு விடு
> உண்மைநெறி சங்கற்பம் உற்று.

இப் பாடல் மதுரை நாயகம் பிள்ளையே எழுதிச் சேர்த்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

இதனுள் கூறப்பட்டுள்ள பதினன்கு சாத்திரங்களும் பின் வருவன; திருவுந்தியார் (உந்தி) திருகளிற்றுபடியார் (களிறு), சிவஞான போதம் (உயர் போதம்) சிவஞான சித்தியார், இருபா இருபஃது (இருபா), உண்மை விளக்கம் (உண்மை) சிவப்பிரகாசம் (பிராகசம்), திருவருட் பயன் (அருள்) வினா வெண்பா (வினா) போற்றி பஃறொடை (போற்றி) கொடிக்கவி (கொடி) நெஞ்சுவிடு தூது (நெஞ்சுவிடு) உண்மை நெறி விளக்கம் (உண்மை நெறி), சங்கற்ப நிராகரணம் (சங்கற்பம்).இவ் வெண்பாவில் கூறப்பட்ட சாத்திர வரிசை முறைமை பெரும்பான்மையான ஏடுகளிற் கண்ட முறை; இதை அனுசரித்தே அனேகமாய் எல்லா சாத்திரப் பதிப்புக்களும் அச்சிடப்பட்டுள்ளன.

இதன் கண் உள்ள ஒரு வேறுபாட்டைப் பின்னர்க் குறிப்பிடுவோம்.

---

1. 'களிறு' என்பதே புத்தகத்திலுள்ள பாடம். இது இறுதி குற்றியலுகரமாகிச் சந்தியினால் அது கெட்டுத் தளை தட்டுவதால், மு. ராகவ ஐயங்கார் இதைக் ''களிறே'' என்று திருத்தினார்.

# சைவ சித்தாந்தம்

சித்தாந்த சிகாமணி, அருட்பாமணி
S. ராமலிங்கம் B. Sc. B. L.,

முன்னுரை :

சைவம், சிவசம்பந்தம் என்னும் பொருள் உடையது. விஷ்ணு சம்பந்தம் வைஷ்ணவம், திலசம்பந்தம் தைலம் என்பது போல்சைவம் சிவசம்பந்தம் எனப் பொருள்படும். சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் சமயம் சைவம் எனப்படும். சித்தாந்தம் என்பது முடிந்த முடிவு என்று சொல்லப்படும். சைவம் என்பது உலகம் எங்கும் பரந்து கிடந்து இருக்கின்றது. வட நாட்டிலும் இருக்கின்றது. அதற்கு ஆங்காங்கே உள்ள சிவலாயங்கள் சான்று. தொன்று தொட்டு வணங்கினார்கள் என்பதற்கு இப்போது ஆங்காங்கே புதைந்து கிடந்து தோண்டியெடுக்கப்பட்ட சிவலிங்கங்கள் முதலியன சான்றுகள். சைவம் என்பது எங்கும் எப்போதும் உள்ளது. இந்தியாவிலேயே இமயம் முதல் குமரி வரை பரவி உள்ளது. காஷ்மீர் நாட்டில் உள்ள சைவத்திற்கு காஷ்மீர் சைவம் என்றும், கன்னட நாட்டில். கன்னட நாட்டு வீர சைவம் என்றும், பலவிதங்களாகப் பெயர் காண்கின்றோம், கேள்வியுறுகின்றோம். தமிழ் நாட்டில் அது சைவம் என்றே சொல்லப்பட்டது. அதனுடைய கொள்கைகளைச் சைவ சித்தாந்தம் என்றும் சொல்லப்பட்டது. இந்தச் சைவத்தை தான் விளக்கிக்காட்டி வளர்த்தார்கள் நமது நால்வர்களும் சைவ ஆசாரியர்களும். அப்பர், சுந்தரர், சம்பந்தர், மாணிக்கவாசகர் முதலிய சமயாசாரியர்களும் மெய்கண்டார், அருள்நந்தி சிவம், மறை ஞானசம்பந்தர், உமாபதி சிவம் என்னும் சந்தானாசாரியர்களும், அவர் தம் வழி வந்தவர்களும், மற்றும் பல அருட் பெரும் சான்றோர்களும் சைவ சித்தாந்தைப் பரப்பி வளர்த்தார்கள். பல நூல்களையும் இயற்றினார்கள். அதனால் நாம் உடனே சைவ சித்தாந்தம் அப்போது தான் தோன்றியது என்று எண்ணக்கூடாது. சைவம் அதன் கொள்கைகள் என்றுமே, எப்போதுமே, ஏற்கனவே உள்ளன. வாஸ்கோடகாமா இந்தியாவை முதன் முதலில் கண்டு பிடித்தார் என்றால் இந்தியா அப்போது தான் தோன்றிற்று என்ற அர்த்தம்

அல்ல. அது ஏற்கெனவே இருந்தது. அதைத் தான் கண்டார் என்பது தெளிவு. எடிசன் மின்சாரத்தை முதன் முதலில் கண்டு பிடித்தார் எனகிறோம். மின்சாரம் அப்போது தான் தோன்றிற்று என்றும் கருதக்கூடாது. மின்சாரம் ஏற்கனவே இருக்கின்றது. அதைத் தான் அவர் கண்டுபிடித்தார். அதுபோன்றே பூமியின் ஆகர்ஷண சக்தி எப்போதும் உள்ளது. அதை நியூட்டன் கண்டு பிடித்தார். அது போன்று சைவம் அதன் கொள்கைகள் ஏற்கெனவே உள்ளன. அதைத் தான் நமது ஆசிரியர்கள் உணர்ந்து அனுபவித்துத் தெளிந்து நம் போன்றவர்களுக்காக நூல்கள் மூலம் விளங்கச் செய் தார்கள். இதைச் சேக்கிழார் பெருமான் ''வேத நெறி தழைத் தோங்க மிகு சைவத்துறை விளங்க'' என்று அருளுகிறார்.

சைவம், சைவ சித்தாந்தம் என்ற உடனே அது ஏதோ சைவர் கள் என்ற ஒரு சாரார்க்கு மட்டுமே உரித்தானது என்று சிலர், ஏன்? பலர் எண்ணி அதை அணுகத் தயங்குகிறார்கள். ஆனால் அணுகிப் பார்த்தால் சைவ சித்தாந்தத்தின் கருத்துக்கள், கொள்கைகள் முதலியவைகள் உலகத்தவர் எவருமே ஒப்பு கொள்ளக் கூடியவைகள் என்று தெள்ளெனத் தெரியும். அதனால் தான் நம் பெரியவர்கள் தென் னாட்டுக் கடவுளான சிவம் எல்லா நாடுகளுக்கும் கடவுள் என்று

''தென்னாட்டுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி''

என்று அருளினார்கள்.

சிவம் என்பது நன்மை, நலம், நன்று என்னும் பொருள் உடை யது. அதனையும் சிவஞானத்தையும், திருவடியையும் திருவருளையும் சிவானந்த அனுபூதியையும் உண்மை என்னும் நூல்கள் மூலம் நம் பெரியவர்கள் வழங்கி உள்ளார்கள். உண்மை, வாய்மை, மெய்மை சத்தியம் செம்மை என்னும் பரியாய பேர்களும் அப்பொருளில் விளங்குகின்றன.

சிவப்பிரகாசம் என்னும் நூலில்

''அவ்வுண்மையை உணரொணுதே'' என்றும்
''உக்றகுறுபவர் போல் வாய்மை ஒழிந்தவை அவை
ஒழிந்து போமே'' என்றும்
''மெய்யே கண்டு கொண்டிருப்பர்'' என்றும்
''அகப்புறம் எனுத செம்மையார்'' என்றும்

திருவருட் பயனில்

''தத்தம் வரும் தொழிலுக்கு வாய்மை பயன்'' என்றும்

திருவுந்தியாரில்

''உண்மை உணர்ந்தார் என்றுந் தீபற'' என்றும்

காணப்படுகிறது. மெய்ப்பொருள், சத்திய பொருள் நித்திய பொருள் என்பது பிரசித்தம். தேவாரத்தில் மெய்ப்பொருளாவது நாதம் நாமம் நமச் சிவாயவே'' என்பது சொல்லப்படுகிறது. திருமூல நாயனர்:

''அன்பு சிவமென் றறியார் இரண்டென்பர்
அன்பு சிவமென் றறிவார்க்கு இரண்டில்லை
அன்பு சிவம்என்று அறிவால் அறிந்தபின்
அன்பே சிவமாய் அறிந்து கொண்டேனே''

என்று அன்பே சிவம் என்று அருளுகின்றார்.

தாயுமானவர்,

''என் அன்பான அறிவே''
''என் அறிவிலூறும் ஆனந்த வெள்ளம்''

என்றும் அருளுகிறார்.

சிவம் பேரறிவு. அது பசுஞானம், பாசஞானத்தால் அறியக் கூடியது அல்ல. பதி ஞானத்தால் மட்டும் அறியக் கூடியது. சிவம் உண்மை யானது நிலையானது. அதை ''சத்'' என்று சொல்லுவார்கள். அது பேரறிவுடையது அதை ''சித்'' என்பார்கள். அது பேரானந்தம். அதை ஆனந்தம் என்பார்கள். ஆகவே

சத் : நிலையானது
சித் : பேரறிவுடையது
ஆனந்தம் : பேரானந்தம் உடையது

இதைத்தான் சத்சித் ஆனந்தம் என்பார்கள். அது மருவி, 'சச்சி தானந்தம்' என்று ஆயிற்று. பல பெரிய சிந்தனையாளர்கள் தங்கள் சிந்தனைக்கு எட்டியவாறு பல நூல்களை இறைவன், கடவுள், உயிர் முதலியவைகளைப் பற்றி இயற்றியுள்ளார்கள். சிவஞான சித்தியாரில் 'பிறநூல் திகழ் பூர்வம் சிவாகமங்கள் சித்தாந் தம் ஆகும்'' என்று அருளப்பட்டது. பிற கொள்கைகள் எல்லாம் பூர்வபக்ஷம் செய்யப் பட்டு, சிவகாமப் பொருளே முடிந்த முடிவாகும் என்று நமது பெரியவர்கள் தெளிவாக்கினார்கள். இந்த உண்மைதான் சைவ சித்தாந்தம் ஆகும்.

# எம்பிரான் சம்பந்தன்

## தா. குருசாமி தேசிகர்

திருஞானசம்பந்தர் 'எம்பிரான்' என்று சுந்தரரால் புகழப்படுகின்ருர். எம்பெருமான் என்ற சொல் லின் திரிபே 'எம்பிரான்' என்பதாகும். எம்பெருமானுக்குரிய பண்பு நலன் திருவடி பேணுதலேயாகும். திருவடியாவது யாது? என்ற வினவிற்கு திருவலஞ்சுழித் தேவாரத்தில் திருஞான சம்பந்தர் அருளுவது சிந்திக்கத்தக்கது.

திருந்திலார்புரந் தீயெழச் செறுவன;
விறலின்கண் அடியாரைப்
பரிந்துகாப்பன பத்தியில் வருவன?
மத்தமாம் பிணிநோய்க்கு
மருந்துமாவன: மந்திரமாவன;
வலஞ்சுழி இடமாக
இருந்தநாயகன் இமையவ ரேத்திய
இணையடித் தலந்தானே.

இத் திருவடிச் சிந்தனையில் ஊற்றம் மிக்குடைய திருஞான சம்பந்தப் பெருமானைச் சுந்தரர் தமது திருத்தொண்டத் தொகையுள்,

'வம்பறுவரிவண்டு மணநாற
மலரும்
மதுமலர் நற் கொன்றையான்
அடியலாற்பேணு
எம்பிரான் சம்பந்தன்
அடியார்க்கும் அடியேன்'
என்று போற்றுகின்ருர்.

திருத்தொண்டத் தொகையின் இம்மூன்று வரிகள் ஆழ்ந்த உட்பொருளை யடக்கியுள்ளன. கொன்றையான் எனச் சிவபெருமானைச் சுட்டிக்காட்டுவதும் அத் திருவடியைப் பேணுதலே சம்பந்தரின் குறிக்கோள் என்பதும் அறிதற்பாலது. கொன்றை ஒரு மரம்; அம்மரத்தின் பூக்கள் 'நற் கொன்றை' என்பதற்குக்காரணம் அப்பூக்கள் ஒரே நாளில் மலர்ந்து மறுநாள் வாடிவிடா. ஒருமுறை மலரும் கொன்றை மலர்கள் நாடோறும் தேனபில்கி ஐந்து நாட்கள் வரை மலர்ந்து நிற்கும். அவ்வைந்து நாட்களிலும் அம் மலரில் மணமும் நாறும்; மது வாகிய தேனும் பில்கி இருக்கும். அம்மலரை நாடி வண்டுகள் நாடோறும் வந்து வரிப் பாட்டிசைத்து மலர்விக்கும். வண்டு ஒருமுறை அமர்ந்த பின்பு மறுமுறை மற்ற பூக்களை ஏறெடுத்தும் பாராது.

புதிய மலர்களை நோக்கியே இடையறுது வரிப் பாட்டுகளைப் பாடிச்செல்லும் வண்டுகள், கொன்றை மலரில் மட்டும் கற்பொழுக்கம் கடைப்பிடிக்கிறது. இக் கடைப்பிடியைக் கொண்டிருப்பது கொன்றை மலரின்

தனிச்சிறப்பு. வண்டின் தன்மையை வம்பருவரி வண்டு என்றூர். வம்புஎன்பது புதுமை. வரி என்பது இசை. புதிய இசை மணம் வண்டிற்கு மணங்கொண்ட மலரால் நிகழ்வது. இசை தோன்றுவதும் அவ்விசை, அன்றன்று புதுமையாகப் பொலிவதையும் இச்சொற்கள் நினைவு கூரும். கொங்குலா வரிவண்டின் இசைபாடு மலர்க்கொன்றைத்தொங்கலான் அடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளவவே' என்ற பதிகத்திலும் மலரின் தன்மை – வண்டின் தன்மை - இறையின் தன்மை - அடியார் தன்மை ஆகியவை தொகுத்துச் சொல்லப்படுவதை அறியலாம்.

எம்பெருமானுகிய இறைவன் யாக்கைக்கு உயிர் இயைந்தன்ன நட்பின் தன்மை உடையவர் என்பதனை சம்பந்தப் பெருமான் பல இடங்களில் உணர்த்துவர். எனினும் அதனிலும் மேம்பட்ட தன்மையில் இறைவன் தனக்கு அமுதமாக விளங்கிய தன்மையைச் சுட்டுகின்ருர். அச்சுட்டு,

'எம்பிரான் எனக்கு அமுதம் ஆவானும்' என்ற தொடர் (சீர்காழி) திருப்பிரமபுரப் பதிகத்தில் வருவது, இத்தொடர் எம்பிரான் தனக்கு அமுதமாக இருக்கும் பான்மையைச் சுட்டுவதாய் அத்தொடர் சுந்தரர் சிந்தையைத் தொட்டிருக்க வேண்டும்.

அமுதம் உண்டாரை நெடுநாள் வாழச் செய்வது. அதுபோலவே இறைஉணர்வு அமுதமாக நின்று தம்மை வாழ்வித்ததாக உணர்த்தும் கருத்து ஆய்ந்து சிந்திக்கத் தக்கது.

சம்பந்தப் பெருமான் பெருநெறி பிடித்து ஒழுகியவர். பெருநெறி பற்றியதோடு மட்டுமன்றி ஒரு நெறிய மனம் வைத்து உணர் ஞானசம்பந்தராக விளங்கியவர். அதனுல்மலர்ந்தஅவர் திருவாய்த் தமிழ் திருநெறிய தமிழாயிற்று. அத்தமிழின் மணம் முழுதும் இறைமணமே பரப்புவது. இதனை ஓதி பலகாலும் உணர்ந்து வழிபட்டவர் சுந்தரமூர்த்திகளாவார். 'சொல்லியவே சொல்லி ஏத்துகப் பானை என்ற சுந்தரர் தேவாரவரி, சம்பந்தர் தேவாரத்தை நன்கு ஓதி உணர்ந்தது மட்டுமின்றி திருநாவுக்கரசர் தேவாரத்தையும் நன்கு ஓதி உணர்ந்த பான்மையையும் சுந்தரர் வாக்கால் புலப்படும்.

திருத்தொண்டத் தொகையில் சுந்தரர் வெளிப்படுத்தும் சரித உண்மைகள் ஆராய்ச்சியாளர்களால் ஒப்புக்கொண்டவை. சமய குரவர்களில் முன்னவராக விளங்கும் திருஞானசம்பந்தரை நாயன்மார்களில் மிகச் சிறந்தவராகக் கருதியதால் திருத்தொண்டத் தொகையில் மூன்றுவரிகள் இடம் அளித்துப் பாராட்டுகின்ருர் சுந்தரமூர்த்திகள்.

இந்த மூன்றுவரிகள் உணர்த்தும் செய்திகள் குறிப்பாக சிந்தனைக்குரியவை.

ஒன்று வண்டு. மற்றொன்று மலராகிய கொன்றை. மூன்றுவது திருவடி.

வண்டின் இயல்பை முன்பு கண்டோம். கொன்றையின் தன்மையும் ஒருவாறு உணர்ந்தோம். வண்டு உயிர்களாகவும், கொன்றையும் அதன் அதன் மதுவும் சார்பாகவும், திருவடி அடையத் தக்க இன்பமாகவும் உணர்த்தப் படுகிறது.

கொன்றை வண்டினை வாழ்விப்பது போல இறைவன் உயிர்களை வாழ்விக்கின்றன் - என்ற உண்மையை உலகிற்கு உணர்த்த அவதரித்தவர் சம்பந்தர்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் சம்பந்தர் தேவாரத்தைப் பலகாலும் ஓதிக்கண்ட திறனய்வு திருத்தொண்டத் தொகை வரியாகும்.

இறைவனைப் பேணுதல்-இறைவன் திருவடிச் சிறப்புகளை உன்னுதலே சம்பந்தப் பெருமானின் அருஞ்சிறப்புகளாகும். சிவபெருமானுடைய திருவடிச் சிந்தனை இல்லாதவர்களைப் பேதையர் என அடையாளம் காட்டுகின்ருர். அச்சிவபெருமானது ஆரூரைத் தொழுது உய்வு அடையலாம் என உலகிற்கு உணர்த்துகின்ருர்.

பவளமாய்ச் சோடையாய்
நாவெழாப்
பஞ்சு தோய்ச் சட்டவுண்டு
சிவனதாட் சிந்தியாப்
பேதைமார்
போலநீ வெள்கினுயே
கவனமாய்ப் பாய்வதோர்
ஏறுகந்
தேறிய காளகண்டன்
அவனதாரூர் தொழுது
உய்யலாம்
மையல் கொண்டஞ்சல்
நெஞ்சே.

என்ற திருப்பாட்டு திருவடிச் சிறப்பை உணர்த்துவது.

இறுதியாக,

பொன்தயங்கு இலங்கொள்
இந்நலங் குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்!
பிஞ்ஞகா! பிறப்பிலி
கொன்றையம் முடியினுர்
கூடலால வாயிலாய்
நின்றயங்கி யாடலே
நினைப்பதே நியமமே!

என்ற திருப்பாடலையும் மருங்கே வைத்து ஒருங்குணர்வார்க்குத் திருத்தொண்டத் தொகை புலப்படுத்துவது ஒருவாறு தெரியவரலாம். உய்ந்துவாழ்வதற்கு நியமமான சில கடமைகள் உண்டு. மனம் நீங்கி வாழ்வதும், இறைவனை மறந்து செல்வத்தில் களிப்பதும் புலன்வழிப் பட்டார் செயல்கள். இடைவிடாது திருவடியைப்பற்றி வாழ்வதுதான் நியமமானசெயல். அச்செயலில் தலைப்பட்டவரே அதனை உணர்த்த முடியும்.

துயர் இலங்கும் இந்த உலகில் துன்பம் நீங்க இறைவன் திருவடியைப் பேணுதல்செய்து வாழ வேண்டும். அவ்வாறு மனம் திருவடியைப் பற்றிக் கொள்ளும் வழிமுறைகளை உணர்த்துவதுதான் சம்பந்தர் தேவார நுட்பச் சிறப்பாகும்.

ஆகவே சம்பந்தப் பெருமான் அவதார நோக்கம் உயிர்களின் வாழ் முதலாகிய இறைவனின் திருவடி மறவாப் பேரன்பே பொலிந்து மலர வேண்டும் என்பது நோக்கமாகும். அந்நோக்கத்தைச் சம்பந்தர் தேவாரத்தை ஓதுபவர் உணர்வார். அதனையே திருத்தொண்டத் தொகை வெளிப்படுத்துகின்றது.

# திருக்கணித பஞ்சாங்கம்

தி. கி. நாராயணசாமி, கடலூர்.

ரௌத்திரி ஞ் மாசி மீ (1981 பிப்ரவரி—மார்ச்)

திதி, நட்சத்திரம் முடியும் நேரம் (மணிக்கணக்கில்)

| தமிழ்வ. | ஆங்கிலம்வ. | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 1 | (12-2-81) | வியாழன் | அஷ்டமி 10-19 | *கார்த்திகை 17-29 |
| 2 | (13-2-81) | வெள்ளி | நவமி 8-29 | ரோகணி 16-26 |
| 3 | (14-2-81) | சனி | தசமி 6-56பின் ஏகாதசி 29-42 | மிருகசீரிஷம் 15-40 |
| 4 | (15-2-81) | ஞாயிறு | துவாதசி 28-48 | திருஆதிரை 15-12 |
| 5 | (16-2-81) | திங்கள் | திரயோதசி 28-17 | புனர்பூசம் 15-06 |
| 6 | (17-2-81) | செவ்வாய் | சதுர்த்தசி 28-09 | பூசம் 15-22 |
| 7 | (18-2-81) | புதன் | O பௌர்ணமி 28-28 | ஆயில்யம் 16-03 |
| 8 | (19-2-81) | வியாழன் | பிரதமை 29-15 | மகம் 17-10 |
| 9 | (20-2-81) | வெள்ளி | துவிதியை நாள் முழுவதும் | பூரம் 18-44 |
| 10 | (21-2-81) | சனி | துவிதியை 6-30 | உத்திரம் 20-45 |
| 11 | (22-2-81) | ஞாயிறு | திரிதியை 8-12 | அஸ்தம் 23-11 |
| 12 | (23-2-81) | திங்கள் | சதுர்த்தி 10-18 | சித்திரை 25-55 |
| 13 | (24-2-81) | செவ்வாய் | பஞ்சமி 12-41 | சுவாதி 28-51 |
| 14 | (25-2-81) | புதன் | சஷ்டி 15-12 | விசாகம் நாள்முழுவதும் |
| 15 | (26-2-81) | வியாழன் | சப்தமி 17-37 | விசாகம் 7-47 |
| 16 | (27-2-81) | வெள்ளி | அஷ்டமி 19-45 | அனுஷம் 10-31 |
| 17 | (28-2-81) | சனி | நவமி 21-21 | கேட்டை 12-49 |
| 18 | (1-3-81) | ஞாயிறு | தசமி 22-18 | மூலம் 14-33 |
| 19 | (2-3-81) | திங்கள் | ஏகாதசி 22-29 | பூராடம் 15-33 |
| 20 | (3-3-81) | செவ்வாய் | துவாதசி 21-53 | உத்திராடம் 15-48 |
| 21 | (4-3-81) | புதன் | திரயோதசி 20-33 | திருஓணம் 15-18 |
| 22 | (5-3-81) | வியாழன் | சதுர்த்தசி 18-33 | அவிட்டம் 14-08 |
| 23 | (6-3-81) | வெள்ளி | ● அமாவாசை 16-01 | சதையம் 12-25 |
| 24 | (7-3-81) | சனி | பிரதமை 13-06 | பூரட்டாதி 10-18 |
| 25 | (8-3-81) | ஞாயிறு | துவிதியை 9-58 | உத்திரட்டாதி 7-56 பின் ரேவதி 29-29 |
| 26 | (9-3-81) | திங்கள் | திரிதியை 6-47 பின் சதுர்த்தி 27-40 | அசுவனி 27-08 |
| 27 | (10-3-81) | செவ்வாய் | பஞ்சமி 24-48 | பரணி 25-00 |
| 28 | (11-3-81) | புதன் | சஷ்டி 22-17 | கார்த்திகை 23-14 |
| 29 | (12-3-81) | வியாழன் | சப்தமி 20-12 | ரோகணி 21-53 |
| 30 | (13-3-81) | வெள்ளி | அஷ்டமி 18-37 | மிருகசீரிஷம் 21-03 |

# வா குழந்தே வா

‘கண்ணபிரான்’

அந்தக் குழந்தை தெருவை எட்டிப் பார்த்தது. பின் தெருவில் இறங்கியது. எங்கே போகலாம் என்று யோசித்தது.

வா குழந்தே வா. என்னிடம் ஓடி. வா உன்னை அணைக்கத் துடிக்கிறேன் வா.

பக்கத்து வீட்டை அடைந்து இரும்புக் கிராதியைப் பிடித்துத் தொங்கியது. ஏற முயன்றது. மறுபடி தெருவை அடைந்தது.

வா குழந்தே வா உன்னை முத்தமிட விரும்புகிறேன். என்னிடம் வந்து விடு.

குழந்தை மண்ணில் அமர்ந்து விளையாடியது. அலுத்துப் போய் எழுந்தது. எதிரே சிவன் கோயிலின் கோபுரத்தைப் பார்த்தது.

வா குழந்தே வா உன்னிடம் எனக்கு எத்தனை ஆசை தெரியுமா? என் மடியில் நீ உறங்கலாம் வா.

குழந்தை மெல்ல கோயிலை அடைந்தது. உள்ளே சென்றது. பலிபீடத்தைப்போய் தொட்டது கையில் கறுப்பாக ஏதோ ஒட்டிக் கொள்ளவே வாயில் வைத்துப் பார்த்தது.

வா குழந்தே வா. என் இன்பம் நீ. என் ஆனந்தம் நீ. என் கண்மணி நீ... உனக்காக நான் எப்படி ஏங்கித் தவிக்கிறேன் தெரியுமா? வாயேன்.

குழந்தை மெல்ல பிரகாரத்தை எட்டி சுற்றி வர ஆரம்பித்தது. மேல்புரத்தில் ஒரு சிறிய நந்தவனம் அதன் கேட் - சாதாரணமாக மூடியிருந்தது. குழந்தை கேட்டைப் பிடித்து ஆட்டியது கேட்திறந்து கொண்டது. உள்ளே சிதறிக் கிடந்த பன்னீர்ப் பூக்கள் குழந்தையின் கவனத்தைக் கவர்ந்தன. குழந்தை உள்ளே சென்றது.

வா குழந்தே வா. உன்னை அரவணைக்க வந்திருக்கிறேன். உனக்குத் தாலாட்டுப் பாடுகின்றேன் வா. என்னிடம் வந்து விடு விரைந்து வா.

குழந்தை பூக்களை எடுத்தது. அதன் கண்ணில் தரை மட்டமாக இருந்த கிணறு பட்டது. இரு கைகளிலும் பூக்களுடன் அருகில் சென்றது. அதனுள்

போட்டது. லேசாக எட்டிபார்த்தது.

வா குழந்தே வா என் உடல் நீ. என் உயிர் நீ. என் தங்கம் நீ. உன் வழிகாட்டிநான. உனக்கு இன்பம் அளிக்கிறேன் வா. வா வா வா வா வந்து விடு.

குழந்தை விளிம்பில் அமர்ந்தது ஒரு காலை உள்ளே விட்டது. ஆட்டியது. அருகில் இருந்த இலை ஒன்றை எடுத்துக் கிணற்றில் போட்டது. லேசாக எட்டிப் பார்த்தது. உள்ளே இறங்கி விட வேண்டுமென்று ஆசைப் பட்டது.

வா குழந்தே வா உனக்காகத் தான் காத்திருக்கிறேன். தயக்கம் வேண்டாம் என்மடியில் உனக்குச் சுகமான படுக்கை உண்டு வந்து விடேன்.

திடீரென்று ஸ்ஸ்ஸ். குழந்தை எதிரே பார்த்தது. கிணற்றின் எதிர் விளிம்பில் நாகம் ஒன்று படம் எடுத்துச்சீறியது. 'ஸ்ஸ்ஸ்'

குழந்தை அதிர்ந்தது. வீறிட்டு அலறியது.

கோயிலினுள்ளே லிங்கத்திற்கு எண்ணெய் சாற்றிக் கொண்டிருந்த குருக்கள் அலறலைக் கேட்டார். அப்படியே விட்டு விட்டு ஓடி வந்தார்.

அலறும் குழந்தையைத்தூக்கிக் கொண்டார். திரும்பினார். ஆ! ஏமாற்றி விட்டாயே குழந்தே.

தெருவே கூடி விட்டது. தாய்க்காரி குழந்தையை அணைத்து உச்சி மோந்தாள.

கிணற்றின் மேல் கட்டை கட்ட வேண்டும் என்று தெரு முடிவு செய்தது.







# போற்றிப் பஃறொடை

தெளிவுரை :

கு. சுந்தரமூர்த்தி எம். ஏ., திருப்பனந்தாள்.

(1) பூமன்னு நான்முகத்தோன் புத்தேளிர் ஆங்கவர்கோன்
மாமன்னு சோதி மணிமார்பன்—நாமன்னும்
வேதம்வே தாந்தம் விளக்கம்செய் விந்துவுடன்
நாதம்நா தாந்தம் நடுவேதம்—போதத்தால்
ஆம்அளவும் தேட அளவிறந்த அப்பாலைச்
சேம ஒளிஎவருந் தேறும்வகை--மாமணிசூழ்
மன்றுள் நிறைந்து பிறவி வழக்கறுக்க
நின்ற நிருத்த நிலைபோற்றி

(தெ-ரை) பொற்றாமரையில் நிலைபெற்ற நான்குமுகத்துடன் விளங்குகின்ற பிரமனும், தேவர்களும், அவர்களுக்குத் தலைவனாக விளங்கும் இந்திரனும், திருமகள் இலங்கும் மார்பில் ஒளிமிக்க கௌவுத்துவ மணியை அணிந்திருக்கும் திருமாலும், நாவிலிருந்து சொல்லப்படுகின்ற வேதங்களும், அவற்றின் முடிவாக விளங்கும் உபநிடதங்களும், அறிவு விளக்கம் தரும் விந்துவும், அதற்கு உள்ளொளியாய் விளங்கும் நாதமும், அதன்முடிவாக விளங்கும் சிவதத்துவமும் தம் இதயத்திடத்தே தோன்றும் அறிவு கொண்டு இயன்றளவும் தேட, அவற்றிக்கு அப்பாற்பட்டதாய், உயிர்க்குப்பாதுகாப்பாக விளங்கும் இறை, உயிர்களை உய்விக்க வேண்டுமென்னும் கருணை கொண்டு தன்னை வணங்குபவர் எவர்க்கும் பேரின்பம் வழங்குதற்கெனச் சிறந்த மணிகளால் இழைக்கப்பெற்ற அழகிய திருச்சிற்றம்பலத்தில் ஒளி நிறைந்து உயிர்களுடைய பிறவிப்பிணி அறுமாறு நிலைபெற்ற ஆடலைச் செய்யும் நிலைக்கு வணக்கம்.

மணி-கௌவுத்துவமணி. எழுதாக் கிளவியாதலின் நாமன்னும் வேதம் என்றார். விந்து-அனைத்துயிர்களுக்கும் உண்டாகிய தொழிலை எழுப்புவித்துநிற்கும் செயல். நாதம்-அனைத்துயிர்களுக்கும் அறிவை எழுப்புவித்து நிற்கும் பேரறிவு. நாதாந்தம்-சிவதத்துவம், இவை இறைவனின் ஒருகூறாக விளங்குதலின் அப்பெருமானை முற்ற அறிதற்கு

இயலாவாயின. போதத்தால்-தம் அறிவால். சேமஒளி-உயிர்கட்கு மலப்பிணிப்பகற்றி அதற்குப் பாதுகாவலைத் தரும் ஒளி: இறை. பெருமானின் திருக்கூத்து ஐந்தொழில் இயற்றும் சிறப்புடையது. அவ்வைந்தும் உயிர்கட்குப் பிறவிப் பிணிக்கு மருந்தாய் அமைதலின் 'பிறவி வழக்கறுத்த நிருத்தம்' என்றார். 'ஓங்கார மேநல் திருவாசி உற்றதனில், நீங்கா எழுத்தே நிறைசுடராம்-ஆங்காரம், அற்றார் அறிவர் அணி அம்பலத்தான் ஆடலிது, பெற்றார் பிறப்பற்றார் பின்', 'தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பில், சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்-ஊற்றமா, ஊன்று மலர்ப்பதத்தில் உற்ற திரோதம்முத்தி, நான்ற மலர்பதத்தே நாடு', 'மாயைதனை உதறி வல்வினையைச் சுட்டு மலம், சாய அமுக்கி அருள் தானெடுத்து-நேயத் தால், ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல், தானெந்தை யார் பரதம் தான்' எனவரும் உண்மை விளக்கப் பாடல்கள் பெரு மானின் ஆடல், உயிர்களின் பிறவியறுத்தற்குக் காரணமாதலை விளக்கும்.

(5) —குன்றாத

பல்லுயிர்வெவ் வேறு படைத்தும் அவைகாத்தும்
எல்லை இளைப்பொழிய விட்டுவைத்தும்-தொல்லையுறும்
அந்தம் அடிநடுஎன்று எண்ண அளவிறந்து
வந்த பெரிய வழிபோற்றி.

(தெ-ரை) அளவிறந்த உயிர்களை அவற்றின் வினைக்கீடாக வெவ்வேறு வகையாகப் படைத்தும், காத்தும், இவ்வகையில் பிறந்தும் இறந்தும் இளைப்புறும் உயிர்களைக் கால எல்லையில் அவ்விளைப்பு நீங்குதற் பொருட்டு ஒடுக்கியும், கால எல்லைக்கு அப்பாற்பட்டு நிற்றலின் முதல், நடு, இறுதி என்று எண்ணற்கு அரியதாய் அவற்றின் அளவு கடந்து நிற்கும் பரம்பொருளின் பெருஞ்செயலுக்கு வணக்கம்.

உயிர்க்கு, உலகு, உடல், கருவி ஆகியவற்றைக் கொடுத்து அவற் றின் வழி நுகரச் செய்வதே படைப்பாகும். அவ்வினையை நுகருமாறு காத்தல் காப்பாகும். இவ்வாறு வினைக்கீடாகப் பிறப்பையும் இறப்பை யும் மாறி மாறிப் பெறுவதால் உயிர் இளைப்புறும். அவ் இளைப்பினால் உயிர்கள் சிறிது ஓய்வு பெறுவதற்கே இறைவன் ஒரு கால எல்லையில் (சர்வ சங்கார காலத்தில்) ஒடுக்குகின்றான். 'எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்' என வரும் திருவாக்கால் உயிர் இளைப்புறுமாற்றை அறியலாம். இறைவன் கால எல்லைக்கு அப்பாற் பட்டவன் ஆதலின் அவனுக்கு முதல், நடு, இறுதி என்ற வரையறை

கூறற்கில்லே. 'ஆதியும் அந்தமுமில்லா அரும் பெருஞ்சோதி' எனக் கூறுவதும் காண்க.

(6) —முந்துற்ற

நெல்லுக்கு உமிதவிடு நீடுசெம்பில் காளிதமும்
தொல்லேக் கடல்தோன்றத் தோன்றவரும்–எல்லாம்
ஒருபுடை யொப்பாய்த்தான் உள்ளவா றுண்டாய்
அருவமாய் எவ்வுயிரும் ஆர்த்தே-உருவுடைய
மாமணியை உள்ளடக்கும் மாநாகம் வன்னிதனைத்
தான் அடக்கும் காட்டத் தகுதியும்போல்–ஞானத்தின்
கண்ணே மறைத்த கடியதொழில் ஆணவத்தால்
எண்ணும் செயல்மாண்ட எவ்வுயிர்க்கும்-உள்நாடிக்
கட்புலனுல் காணுர்தம் கைக்கொடுத்த கோலேபோல்
பொற்புடைய மாயைப் புணர்ப்பின்கண்-முற்பால்
தனுகரண மும்புவன மும்தந்(து) அவற்ருல்
மனமுதலால் வந்தவிகா ரத்தால்-வினேயிரண்டும்
காட்டி அதனுற் பிறப்பாக்கிக் கைக்கொண்டும்
மீட்டறிவு காட்டும் வினேபோற்றி

(தெ-ரை) நெல்லுக்கு உமியும், தவிடும்; செம்பிற்கு, நெடிது நிற்கும் களிம்பும் போல, கால எல்லேக்கு அப்பாற்பட்டே தொடர்ந்து வரும் தன்மையதாய்ப் பழமையான கடலில் உப்புக் கலந்திருப்பது போல உயிரோடு கலந்திருப்பதாய். இத்தகைய உவமைகளனேத்தும் தனக்கு ஒருபுடையொப்பாய் நிற்கத் தான் என்றும் நிலே பேறுடையதாய், வடிவு இல்லாததாய், எல்லா உயிர்களேயும் தனக்குள் கட்டுப்படுத்தி, ஒளிமிக்க நிலமணியை உள்ளடக்கி இருக்கும் பெரிய பாம்பினேப் போலவும், நெருப்பைத் தன்னிடத்து மறைத்து நிற்கும் விறகினேப் போலவும் உயிர்களின் அறிவினே மறைத்து அறியாமையைச் செய்யும் கொடுந்தொழிலுடைய ஆணவ மலத்தால், எண்ணுதற்குரிய செயலொழிந்த எல்லா உயிர்கட்கும். அவ்வவ்வுயிர்களின் விருப்பறிந்து கண்பொறியற்ற குருடர்க்குக் கைகொடுத்து உதவுமாறு கொடுத்த கோலேப்போல, பொலிவுமிக்க மாயையோடு கூட்டுவித்து அதன் விளேவால் முதற்கண் உடல், கருவி, உலகு, நுகர்வு முதலியவற்றைக் கொடுத்து, மனம் மொழி மெய்களினுல் உளவாகும் இருவினேப் பயனேயும் கூட்டுவித்து அவற்றை நுகர்தற்காகப் பிறப்பினேயும் உள தாக்கி அதனுல் மலநீக்கம் பெற்ற தகுதியுடைய உயிர்கட்கு, அவற்றி னின்றும் மீளச்செய்து தம் பேரின்பத்தை வழங்கியருளும் பெருஞ் செயலுக்கு வணக்கம்.

ஆணவம் உயிரைப் பிணித்து நிற்பது. கால எல்லைக்கு அப்பாற் பட்டது. அப்பிணிப்பிற்குக் காரணம் அறிய இயாலாது. நெல்லிற் குரிய உமியும் தவிடும் கால எல்லை கடந்து அதனிடத்தில் என்றும் இருப்பது போல, ஆணவமும் உயிரினிடத்துக் கால எல்லை கடந்து அதனுடனே என்றும் இருக்கும். செம்பின் நிறத்தைக் களிம்பு மறைப் பது போல, உயிரின் அறிவை ஆணவம் மறைத்து நிற்கும். கடல் வெளியில் உவர்ப்பு இருந்தும் அவ்வெளியைப் பற்ருது நீரையே பற்றி நிற்பது போல இறைவனின் அருள்வெளியில் உயிர் இருப்பினும் ஆணவம் இறைவனைப் பற்றுதற்குரிய ஆற்றலின்றி உயிரையே பற்றி நிற்கும். முற்பால்-முதற்கண். தனு-உடம்பு. காளிதம்-களிம்பு. நெல்லிடத்துள்ள உமியும் தவிடும் அதனிடத்தே நீங்கிய பின் கூடு வதில்லை. ஆனல் ஆணவமோ உயிரிடத்து என்றும் பிரிவதுமில்லை; அவ்வகையால் பின் கூடுவதுமில்லை. செம்பினிடத்துக் களிம்பு அதனுடன் தோன்றுவதில்லை; பின்னரே தோன்றும். ஆனல் உயிரினது அறிவை மறைத்து நிற்கும் ஆணவமோ, உயிரிடத்து என்றும் இருப்பதாகும். நீரைப்பற்றி நிற்கும் உவர்ப்புத்தன்மை, கடல்வெளியை முழுமையாகப் பற்ருதாயினும் ஓராற்ருன் அதன் தன்மை கலந்து நிற்கும். ஆனல் உயிரிடத்து நிற்தும் ஆணவமோ இறைவனைச்சிறிதும் தகைக்கவல்லதல்ல. ஆதலின் இவ்வுவமைகள் ஒருபுடையொப்புமை யாய் வந்தன என்ருர். வன்னி-விறகு. காட்டம்-நெருப்பு. ஞானத் தின்-உயிரின். மாயை மயக்கம் தருமேனும் மலப்பிணிப்பகலத் துணை யாயும் நிற்றலின் 'பொற்புடைய மாயை' என்ருர். 'விடிவாமளவும் விளக்கனைய மாயை' எனத் திருவருட் பயனில் இவ்வாசிரியர் கூறு மாறும் அறிதற்குரியது.

(13) —நாட்டுகின்ற

எப்பிறப்பும் முற்செய் இருவினையால் நிச்சயித்துப்
பொற்புடைய தந்தைதாய் போகத்துட்-கர்ப்பமாய்ப்
புல்லிற் பனிபோற் புகுந்திவலைக்(கு) உட்படுங்கால்
எல்லைப் படாஉதரத்(து) ஈண்டியதீப்-பல்வகையால்
அங்கே கிடந்த அநாதிஉயிர் தம்பசியால்
எங்கேனுமாக எடுக்குமென-வெங்கும்பிக்
காயக் கருக்குழியில் காத்திருந்தும் காமியத்துக்(கு)
ஏயக்கை கால்முதலாம் எவ்வுறுப்பும்-ஆசறவே
செய்து திருத்திப்பின் புயோகிருத்தி முன்புக்க
ஐயவழி யேகொண்(டு) அணைகின்ற-பொய்யாத
வல்லபமே போற்றி

(தெ-ரை) நூல்களில் எடுத்துக் கூறப்படுகின்ற எல்லாப் பிறப்புக் களையும் அவ்வவ்வுயிரும் முன்செய்த இருவினைக்குத்தகப் பெறுமாறு திருவுளத்தெண்ணி அவ்வாற்றான் வந்த பிறப்பு வகைகளில் நற்றவ மிகுதியான் வரும் மானிடப் பிறப்பில் அழகுமிக்க தந்தையும் தாயும் கூடும் இன்பப் புணர்ப்பில் தாயினுடைய கருவில் தந்தை, புல்நுனியில் தங்கும் பனித்திவலை போன்ற விந்துவை விடும்பொழுது அதற்குள் உயிரைக் அடக்கிக்கருக்குழியில் அதனை இருத்தித் தாய் வயிற்றில்உள்ள அளவற்ற வெப்ப மிகுதியால் அது அழிவுறாமலும், அவ்வயிற்றுக்குள் பலவாகப் பரந்து கிடக்கும் உயிர்ப்புழுக்கள் தமக்குரிய பசியால் எவ்வகையிலேனும் உண்டுவிடுமோ எனக் கருதி வெப்பமிகுந்த நரகனைய் கருக்குழியில் காத்திருந்தும், அவ்விடத்து அவ்வுயிரின் வினைக்கேற்பக் கை, கால் முதலிய உறுப்புக்களைக் குற்றமற உளவாக்கி அவற்றை அழகு பொருந்தத் திருத்தி பின்பு அவ்வுடலை எடுத்து ஒடுங்கியிருக்குமாறு செய்து பத்துத் திங்கள் வரையிலும் அதன் வளர்ச்சிக்குரிய உணவையும் நல்கிப் பின்பு நிலத்தில் பிறக்கும் பொழுது இருகைகளும் தலைமீது குவிந்தநிலையில் தலைகீழாய் வருமாறு செய்து முன்பு புகுந்த சிறு வழியைப் பெருவழியாக்கி உயிர் துன்புறா வண்ணம் அதனை அணைத்து வெளிச் செலுத்தும் மெய்ம்மையாகிய அருள் திறத்திற்கு வணக்கம்,

நாட்டுகின்ற - ஆகமங்களிலும் அதன் வழி வந்த நூல்களிலும் சொல்லப்படுகின்ற. ‘ஊர்வ பதினொன்றும் ஒன்பது மானுடம், நீர்பறவை, நாற்காலோர் பப்பத்துச் - சீரிய, பந்தமாம் தேவர் பதினாலு அயன்படைத்த, அந்தமில் சீர்த்தாவரம் நாலைந்து’ என்னும் பாடலால் பிறப்பு வகை என்பத்து நான்கு நூறாயிரமாதல் விளங் கும். ஐம்பெரும் குரவராவார் தந்தையாய் உள்ளிட்டோர் ஆதலின் ‘பொற்புடைய தந்தை தாய்’ என்றார். தந்தையிடத்திருந்து வெளிப் படும் விந்திற்குப் புல் நுனிமேல் நிற்கும் பனித்திவலை உவமையாதல், ‘அறுகு நுனி பனி அனைய சிறிய துளி பெரியதொரு ஆகமாகியோர் பாலரூபமாய்’ எனவரும் அருணகிரியார் திருவாக்காலும் அறியலாம். வயிற்றில் உயிர் அணுக்கள் (கிருமிகள்) பல உளவாதலை இக்கால விஞ்ஞான உலகமும் ஏற்றுக் கொண்டதொன்று. இஞ்ஞானப் பனுவலில் அவ்வுண்மை சுட்டப்படுதல் அறிதற்குரியது. வெம்கும்பி - வெப்பமும் தூய்மை யின்மையும் ஒருங்கு அமைந்த நரக வகை. வயிற்றினகத்துள்ள கருக்குழியும் அன்ன தாகலின் இதற்கு அது உவமையாயிற்று. காமியத்தூக்கியைய-வினைக்குத்தக. ஆசு-குற்றம். உருவின்மிக்கதோர் உடப்பது பெறுதற்கும் நல்வினை வேண்டுமென்ப தாம். யோகு இருத்தி-தலைமீது குவிந்த கையுடன் இருக்கச்செய்து.

வரும் வழிக்கேற்பக் கருவிகள் அமைய வேண்டியிருத்தலின் இவ்வாறு இருக்கச் செய்ததும் அவன் கருணையேயாம். ஐயவழி - சிறிய வழி.

மானிடப் பிறவி வாய்ப்பது பற்றியும், வாய்க்குங்கால் தாய் வயிற்றில் கருக்கொள்வது முதல் பத்தாவது திங்களில் குழவியாக உயிர்க்கும் வரை அதற்கு ஏற்படும் அழிவு பற்றியும் மணிவாசகப் பெருமான் தெளிவாக அருளுவர். 'யானை முதலா எறும்பு ஈறாய, ஊனமில் யோனியின் உள்வினை பிழைத்தும், மானுடப் பிறப்பினுள் மாதா உதரத்து, ஈனமில் கிருமிச் செருவினில் பிழைத்தும், ஒருமதித் தான்றியின் இருமையில் பிழைத்தும், இருமதி விளைவின் ஒருமையில் பிழைத்தும், மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும், ஈரிரு திங்களில் பேரிருள் பிழைத்தும், அஞ்சு திங்களில் முஞ்சுதல் பிழைத்தும், ஆறு திங்களில் நூறலர் பிழைத்தும், ஏழு திங்களில் தாழ் புவி பிழைத்தும், எட்டுத் திங்களில் கட்டமும பிழைத்தும், ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும், தக்க தசமதி தாயொடு தான்படும், துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்' என வருவன ஆழ எண்ணுதற்குரியதாம். 'ஈனமில் கிருமி' என இவர் குறித்திருப்பதற்கேற்ப 'அங்கே கிடந்த அநாதி உயிர், என உமாபதி சிவம் குறித்திருப்பதும் ஒப்பிட்டுணர் தற்குரியதாம். இவ்வாறு உடனிருந்து உதவும் பெருங்கருணையை ஈண்டு விரித்துக் கூறிய மணிவாசகர், பின் 'உருத் தெரியாக் காலத்தே உள்புகுந்து உளம் மன்னிக் கருத்திருத்தி ஊன்புக்குக் கருணையில் ஆண்டு கொண்ட' எனச் சுருங்கவும் அருளுவர். பொய்யாத வல்லபம் - தவறாத செயல்திறன்: ஒவ்வொரு நிலையிலும் இறைவனின் கருணைப் பெருக்கு முன்னின்று அருளுதலின் 'பொய்யாத வல்லபம்' என்றார்.

அம் மாயக்கால் தான்மறைப்ப
நல்ல அறிவொழிந்து நன்குதீ-தொல்லையுரு
அக்காலந் தன்னிற் பசியைஅறி வித்(து)அழுவித்(து)
உக்காவி சோரத்தாம் உள்நடுங்கி-மிக்குலங்கும்
சிந்தை உருக முலையுருகுந் தீஞ்சுவைப்பால்
வந்துமடுப் பக்கண்டு வாழ்ந்திருப்பப்-பந்தித்த
பாசப் பெருங்கயிற்றால் பல்லுயிரும் பாலிக்க
நேசத்தை வைத்த நெறி போற்றி

# நூல்நிறை

## தமிழ் வளர்க்கும் தருமபுரம்

*[ஆசிரியர்: புலவர் திரு. இரா. செல்வக் கணபதி எம். ஏ., வெளியீடு: ஞானசம்பந்தம் பதிப்பகம், தருமபுரம். பக்கம் 172. விலை: ரூ. 5. கிடைக்குமிடம்: தருமையாதீனம், தருமபுரம், மாயூரம் வழி தஞ்சைமாவட்டம்]*

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சன்னிதானம் அருளாணையின் வண்ணம், மதுரை ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டு வெளியீடாக இந்நூல் வெளியிடப் பெற்றுள்ளது. ஆறு தலைப்புக்களில் வரலாறு கூறும் அரிய நூல்.

தருமையாதீனத்தில் அருட்செங்கோலாச்சிய அருளாளர்களின் நற்பணிகள் விளக்கப் பெற்றுள்ளன. ஸ்ரீ காசிமடம் ஸ்தாபகர் ஸ்ரீலஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் அவர்களின் வரலாறும் அருளிய நூல்கள் சிலவற்றின் குறிப்பும் இந்நூலில் குறிக்கப் பெற்றுள்ளன. பலரும் அறியாத பல அரிய அற்புத நிகழ்ச்சிகளைத் தருமை ஆதீன சன்னிதானங்கள் நிகழ்த்தியுள்ளார்கள். அவ்விளக்கங்களை இரண்டாவது தலைப்பில் ஆசிரியர் சுவையாகக் குறித்துள்ளார். தருமையாதீனத்திற்குச் சொந்தமான 27 தேவஸ்தானங்கள் பற்றிய செய்திகளையும் இந்நூலால் அறியலாம்.

தருமையாதீனம் என்றவுடன் திருக்குறள் உரைவளம், உரையுடன் கூடிய திருமுறைப்பதிப்புகள் என்று நினைவுக்கு வரும். ஆதீன வெளியீடுகள் என்ற தலைப்பில் தருமையாதீனத்தின் பதிப்புகளைப் பற்றி ஆசிரியர் விளக்குகிறார். பிரமிக்கத்தக்க அளவில் தமிழ்ப்பணி புரிந்திருக்கும் ஆதீனம் என்று புரிந்து கொள்ளவைக்கிறார்.

இந்நூல் மதுரையில் நடை பெற்ற ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டில் பேராளர்களுக்குத் தருமையாதீன அன்பளிப்பாக வழங்கப் பெற்றது.

சமய வரலாற்று நூல், மரபு விளக்க நூல், இலக்கியப் பதிப்பு வரலாற்று நூல், என்னும் பல தகுதிகளையும் நிறையப்பெற்றுள்ள இந்தநூல் 'ஆதீனங்கள் தமிழுக்கு என்ன செய்தன' என்னும் அசுர வினாவுக்குக் கந்தன் கைவேல் போன்றதாகும். பேராசிரியர் திரு. செல்வக்கணபதி அவர்களின் பட்டை தீட்டப் பெற்ற வைர எழுத்தாற்றல் நூலுக்கு மேலும் மேலும் பெருமை சேர்க்கிறது.

## ஸ்ரீ சங்கர ஜயந்தீ மலர்

[தொகுப்பாசிரியர் திரு. ஆங்கிரஸ S. வெங்கடேச சர்மா. பக்கங்கள் 320. விலை. ரூ. 6-50 வெளியீடு: கிடைக்குமிடம் ஸ்ரீ சங்கர பக்த ஜனசபா. 5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு, மேல மாம்பலம், சென்னை 600033]

திரு. வெங்கடேச சர்மா அவர்களின் பன்மொழிப் பேரறிவையும் சமயப் பணிகளையும் ஆத்திக உலகம் நன்கறியும். ஸ்ரீ சங்கர பக்த ஜனசபாவின் ஸ்தாபகரும் அவரே. ஸ்ரீ சஙகர ஜயந்திக்குத் தொடர்ந்து மலர் வெளியிடுவதும் இச்சபையின் சேவைகளில் ஒன்று.

1980 ஆண்டின் சங்கர ஜயந்தி மலர் வெளிவந்துள்ளது. கணபதி ஸ்தோத்திரம், சிவஸ்துதி, தி நாக் ரத்ன ஸ்தோத்திரம், ஸ்ரீ திரிபுர ஸுந்தரிஸ்தோத்திரம், ஸ்ரீ சுப்பிரம்மண்ய கத்யம் ஆகியவற்றை உரையுடன் இம் மலரில் பதிப்பித்திருப்பது பெரிதும் வரவேற்கத் தக்கதாகும். டாக்டர் திரு. ந. கங்காதரன் அவர்களின் உரை எளிமையும் இனிமையும் செறிந்ததாகும். இந்த 62 பக்கங்களையுமே தனியாகவும் அச்சிட்டு வெளியிடலாம்.

திரு. கே. ஆர். நடராஜன் டாக்டர் திரு. M. பாலசுப்பிரமணியன் மஞ்சக்குடி திரு. கே. இராஜ கோபால சாஸ்திரிகள் திரு. P. N. நாராயண சாஸ்திரிகள் டாக்டர். திரு. N. கங்காதரன் முதலிய பெரியவர்களின் அரிய கருத்துப் படையல்களும் நம்மைக் கவர்கின்றன.

தெரிந்து கொள்ளவேண்டிய நூற்றுக்கணக்கான செய்திகளைக் கொண்ட தொகுப்பாக மிக்க கவனத்துடன் சிந்தனை ஆற்றலுடன் இத்தொகுப்பு வெளி வந்துள்ளது.

## சைவ மத வினு விடை

[ஆசிரியர்: வித்துவான் திரு. மறை. திருநாவுக்கரசு. பக்கங்கள் 8+68; விலை ரூ. 2. வெளியீடும் கிடைக்குமிடமும்: மறைமலை அடிகள் பதிப்பகம், சி 237 சவகர் நகர், அகரம் பெரம்பூர், சென்னை- 600082]

புகழ் பெற்ற தமிழறிஞராகிய திரு. மறை திருநாவுக்கரசு அவர்கள் 35 தலைப்புக்களில் பல வினாக்களுக்கு விடை கூறும் நூலாகும் இது. எல்லா வகையினரின் சமய ஐய வினாக்களுக்கும் இந் நூலில் விடை இருப்பது ஒரு பெரும் தனிச் சிறப்பாகும். கோயிலின் குறைபாடுகள் நம் மதத்தில் மட்டுமல்ல; தீண்டாமையை நம் மதம் என்றும் பின்பற்றியதில்லை போன்ற கருத்துக்கள் நெஞ்சத்தை விழித்தெழச் செய்கின்றன. எதையும் ஒளிவு மறைவு இல்லாமல் துணிச்சலாக எழுதும் இவரின் விடைகள் 'விடை' போலக் கம்பீரமானவை. இந் நூலின் உணர்வுகளைச் சமய உலகம் புரிந்து கொள்ள வேண்டும்.

## பெரிய புராண ஆய்வுரை

### நான்கு தொகுதிகள்

### 1. சுந்தரர் 2. அப்பர் 3. சம்பந்தர் 4. அறுபது அடியார்கள்

*[ஆசிரியர்: திரு. மறை. திருநாவுக்கரசு, பக்கங்கள் (1) 16+234 (2) 16+264 (3) 16+236 (4) 64+148 விலை. (1) ரூ. 10 (2) ரூ. 10 (3) ரூ. 10 (4) ரூ. 10; வெளியீடும் கிடைக்கும் இடமும்: மறை மலையடிகள் பதிப்பகம், சி 237 சவகர் நகர் அகரம் பெரம்பூர் சென்னை 600082]*

பழுத்த தமிழ்ப் புலமை சான்ற திரு. மறை. திருநாவுக்கரசு அவர்கள் இந்த ஆய்வுரை நூல்களைத் தமிழும் சைவமும் தழைக்கத் தந்துள்ளார். புரியாத செய்திகளைப் புரியாமலே எழுதும் ஆராய்ச்சி நெரிசல்களிலிருந்தும் நீங்கிப் பிரச்சனையான- ஐயமான செய்திகட்கும் எளிய அணுகு முறையில் அரிய நுணுக்கங்களை இந்நூல்கள் அளிக்கின்றன. இந்த ஆய்வுரையை முற்றும் கற்றால் பெரியபுராணத்தில் நாத்திக வினா எழுப்பவே இடமிருக்காது. அற்புதங்கள் அனைத்தும் நிகழ்ந்தனவே என்பதை இவ்வாராய்ச்சி ஆசிரியர் பலப்பல ஒத்துக் கொள்ளத் தக்க சான்றுகளால் மெய்ப்பிக்கும் இடங்கள் மெய்சிலிர்க்க வைக்கின்றன. அடியார்கள் தெய்விக வாழ்வியல் இயக்கங்கள் யாவுக்கும் தக்க காரணங்களை இவ்வாராய்ச்சித் தொகுதிகள் அறிவிக்கின்றன.

திருமுறைகளுடன் இல்லங்களில் உடன் வைத்துக் கொள்ள வேண்டிய தொகுப்புக்கள்.

PRESS & REGISTRATION OF BOOKS ACT.

Registration of Newspapers (Central) Rules, 1956.

FORM IV. Sec Rule 8 R. No. 33576/78

Statement about ownership & other Particulars about

"SRI KUMARAGURUPARAR" (MONTHLY)

1. Place of publication : TIRUPPANANDAL.
2. Periodicity of its publication : MONTHLY
3. Printer's Name : M. MAIKANDADEVAN
   Nationality : Indian
   Address : Sri Kumaraguruparar Achagam
   Sri Kasi Mutt,
   Tiruppanandal.
4. Publisher's Name MA. VEA. PASUPATHY,
   Nationality : Indian
   Address : Sri Kasi Mutt,
   Tiruppanandal.
5. Editor's Name : MA. VEA. PASUPATHY,
   Nationality : Indian
   Address : Sri Kasi Mutt,
   Tiruppanandal
6. Names and addresses of individuals who own the newspaper, and partners or shareholders holding more than one percent of the total capital. His Holiness Sri - la - Sri Kasivasi Muthukumaraswami Tambiran Avl., Head of Sri Kasi Mutt, Tiruppanandal.

I, MA. VEA. Pasupathy, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Date 12—2—81

MA. VEA. PASUPATHY
Signature of Publisher

# திருத்தலயாத்திரை

## திருமணஞ்சேரி

வித்துவான் பொன். முருகையன்

சோழ ஈட்டில் காவிரியின் வட பாலுள்ள தலங்களுள் இது சிறந்த ஒரு தலமாகும். இது, தஞ்சை மாவட்டம் குற்றாலத்திலிருந்து வடகிழக்கே மூன்று கல் தொலைவில் உள்ளது. மாயூரத்திலிருந்து மணல்மேடு வழியாகக் குத்தாலம் செல்லும் பேருந்து மூலம் இவ்வூரையடையலாம். இவ்வூரைச் சுற்றி திருப்பந்தணை நல்லூர், திருவேள்விக்குடி, திரு எதிர்கொள்பாடி முதலிய தலங்கள் அமைந்துள்ளன.

தலச்சிறப்பு திருஞானசம்பந்தராலும், திருநாவுக்கரசராலும் பாடப் பெற்ற சிறப்பினையுடையது. மன்மதன் சாபம் தீரப் பூசித்துப் பேறு பெற்ற பெருமையினையுடையது. ஆமை பூசித்து மனித உருப்பெற்ற சிறப்பினையுடையது.

இறைவனின் பெயர்:

அருள் வள்ளல் நாதர்

இறைவியின் பெயர்:

யாழினும் மென்மொழியம்மை

கல்வெட்டுச் சிறப்பு மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற முப்பெருமைகளையுடைய இத்தலத்தில், கோயில் சோழர் காலத்தில் அமைக்கப்பட்டது' என்பது கல்வெட்டுக்களால் அறியக்கிடக்கிறது. இக்கோயிலில் உள்ள கல்வெட்டுக்கள் 28 ஆகும். அனைத்தும் சோழர்களுடைய கல்வெட்டுக்களே. கல்வெட்டில் இவ்வூர் 'விருதராசபயங்கர வளநாடு, குறுக்கை நாடு, திருமணஞ்சேரி' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. சுவாமியின் பெயர் திருக்கற்றளி நாதர் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

கல்வெட்டால் அறியப்படும் செய்திகள்

கோயிலில் நித்திய பூஜைகள் நடைபெறும் பொருட்டு அரசராலும், ஏனையோராலும் பல நிபந்தங்கள் விடப்பட்டுள்ளன.

1 கோயிலுக்காக நிலதானம்
— 4-5-1045

2. சபையார் நிலதானம்
— 7-2-1123

3. திருவிளக்குக்காக பணதானம்
— 1000

4. சில யோகிகள், தபசிகள் ஆண்டுக்கொரு முறை பங்குனி மாதத்தில் உணவுண்ண
— நிலதானம்

5 திருவிளக்கெரிய — 96 ஆடு
தானம்

6 திருவிளக்கு அமைக்க —
16 கழஞ்சு பொன்தானம்

7. உடைய பிராட்டியார் சொற்படி சந்தனம், துணி, எண்ணெய் செலவுக்கு — 16 கழஞ்சு பொன்
தானம்

8. தினப்படி பூஜைத் திட்டம்
— நிலதானம்

9. விளக்குப் பீடம்
முழவு, விளக்கு, மணி, மூர்த்தி, இரவு விளக்குத் தானம், குகை கட்ட பணம்

பிறசெய்திகள்

இங்குள்ள திருமாலுக்குக் கரிகால் சோழ விண்ணகராழ்வான் என்ற பெயர் அமைந்திருந்ததாகக் கல்வெட்டு கூறுகிறது. கோயிலின் பெயர் மணவாளப் பெருமான். கோயில் அதிகாரியின் பெயர் கந்தாராடை நம்பி. திருப்பணி செய்தவன் திருமணஞ்சேரி பிச்சன். கோயிலின் நடைமுறைத் திட்டங்களை வகுத்தவர் செம்பியன் மாதேவியார். கோபுரம் கட்டியவர் நல்லமநாயக்கர். அக்னி புராணச் சுலோகங்கள் திட்டப்பட்ட ஒரு கல்வெட்டு இக்கோயிலில் உள்ளது. ஆதித்த தேவன் என்பான் நாய்ச்சியம்மன் கோயில் கட்டவும், ஆலாலசுந்தரம் என்பான் குகைகட்டவும் பணம் கொடுத்ததாகக் கல்வெட்டு கூறுகிறது.

பதிகச் சிறப்பு

ஞானசம்பந்தர் பாடிய பதிகம் ஒன்றும், திருநாவுக்கரசர் பாடிய பதிகம் ஒன்றும் ஆக இரு பதிகங்கள் இருக்கின்றன.

இவற்றுள் ஞானசம்பந்தர் பதிகம் அயிலாரும் அம்பு எனத் தொடங்குகிறது. பதிக முதல் பாடலிலிருந்துஇறைவியின் திருப்பெயர் குயில் வாய் மொழியம்மை என்பது விளங்குகிறது. திருமாலை அம்பாகக் கொண்டு இறைவன் திரிபுரத்தை எரித்த செய்தியும் விளங்குகிறது. ஞானசம்பந்தப் பெருமான் இத்தலத்திற்கு எழுந்தருளிய போது அங்கு பண்ணோடு இசை பாடுதல் சிறந்திருந்ததைப் பதிகப் பாடலில் (4) 'பண்ணிசை பாடும் மணஞ்சேரி' என்று அருளுவதால் உணரலாம். இறைவன் உண்மைப் பொருளாக விளங்குபவன், எருதேறிவருபவன், நான் மறையும் ஆறு அங்கங்களும் மொழிந்தவன், இராவணன்முடி பத்தும், தோள் இருபதும் கெடுத்தவன் என்ற திருவருட் செய்தி

களெல்லாம் பதிகப் பாடல்களில் அமைந்துள்ளன. பதிகப்பாடல் களின் இறுதி ‘இல்லை பாவமே’ ‘வினை ஆறுமே’ ‘இல்லை அல்லலே’ என்று முடிவது சிறப்பாக உள்ளது.

அப்பர் சுவாமிகள் பாடிய பதிகத்தில் இறைவனை ‘மணஞ் சேரி மருந்து’ ‘வள்ளலார்’ ‘இலங்கு சூலத்தர்’ ‘மண்ணைத் தம் முழவார்’ என்று புகழ்ந்து உரைத்தல் சிறப்பாக உள்ளது.

இத்தலம் தற்காலத்தில் பொது மக்களாலும், பக்தர்களாலும் சிறப்பாக வணங்கப்படும் பெருமையினைப் பெற்றுள்ளது. திருமணஞ்சேரி ( திருமணம் + சேரி ) என்ற பெயருக்கேற்ப, திருமண வயது வந்த பெண்கள் இத்தலத்திற்கு வந்து நீராடி, இறைவனுக்கு அர்ச்சனை செய்த பின், இறைவனுக்குச் சாத்தப்பட்ட மாலையை அணிந்தால் அவர்களுக்கு விரைவில் திருமணம் அமையும் என்ற கருத்து நிலவி வருகிறது. எனவே வெள்ளிக் கிழமை, ஞாயிற்றுக்கிழமை ஆகிய நாட்களில், இவ்வூருக்குப் பக்தர்கள் வருதல் மிகுந்துள்ளது.



உ

Siva Siva

# Thevara Goshti - Mahasivaratri Festival

## KALAHASTI

Conducted according to the orders of His Holiness

Sila Sri Kasivasi Muthukumaraswami Thambiran Swamigal Avergal

Head of Sri Kasi Mutt, Tirupanandal (Thanjavur Dt.)

From 1—3—81 to 6—3—81

The Siva Shrine at Kalahasti is one of the shrines sanctified by the Hymns improvised by the three Great Saiva Saints — Thirugnansambandar, Thirunavukkarasar and Sundarar. A spider, a cobra and an elephant attained salvation by worshipping the Lord and hence the Kshetra got the name Sri Kalahasti. It is one of the Pancha Bhoota Kshetras — Vayulinga where Kannappa Nayanar attained beatitude in six days. In such a famous Kshetra a Thevara Goshti will be conducted for six days from 1—3—81 to 6—3—81 during the Mahasivaratri Festival of Sri Kalahastiswaraswami Devasthanam at Kalahasti and the names of the Thevara Hymnists are given below :-

1. Thiru. RETHINAM PILLAI, Chidambaram.
2. Thevaramani Thiru. A. SATTAYAPPAN, Chidambaram.
3. Thevaramani Thiru. CHOCKALINGA OTHUVAR, Kalahasti.
4. Thiru. N. ARUMUGA DESIGAR Violinist, VIZHITHIYOUR.
5. P. SIVAVADIVELU PILLAI, Mirdangam, Sivapuri.

MAY SIVA BLESS ALL

**B. CH. VENKATESWARALU** B.A.B Ed.
Asst, Commr. Executive Officer
Sri Kalahastiswaraswami Devasthanam,
KALAHASTI (Andra Pradesh)

**K. SUBRAMANYA IYER** B.A.
"Thiagaraja Vilasam"
62, Pillaiyar Koil Street,
Triplicane, P. o. MADRAS - 600 005.

உரை நடை

அவள் தன் குழந்தையை அருகிலிட்டு அயர்ந்து படுத்தாள். இலைகள் நிறைந்த அந்த ஆலமரத்தின்மேல் முன்னொரு நாளில் ஒரு வேடனால் எய்யப்பெற்ற, ஒரு கூரிய அம்பு கோப்புண்டு கிடந்தது. காற்றினால் அலைக்கப்பட்டு மரம் அசைதலால் அவ்வம்பு வீழ்ந்து, அங்கே தங்கியிருந்த பார்ப்பனியின் வயிற்றிலே ஊடுருவத் தைத்தது. முன்னை வினைப்பயன் முடியப்பார்ப்பனி உயிர் நீத்தாள். அப்பொழுது ஆண் சிங்கத்தை ஒத்த ஒரு வேடன் செவ்வாளியினை ஏறிட்ட வில்லை யுடையனாய் வெயிலுக்கு ஒதுங்கி இருக்கத்தக்க நிழலினைத்தேடி அந்த ஆலமரத்தின் நிழலையடைந்து இளைபாறுதற்கு அம்மரத்தின் பக்கத்தில் நின்றான். தண்ணீரினைக் கொணர்தற் பொருட்டுச் சென்ற பிராமணன், உண்ணும் நீரினைக் கைக்கொண்டு திரும்பிவந்த பொழுது, ஒருங்கு இருந்த குழவியோடும் இரத்த வெள்ளத்தில் அழுந்தி உயிர் துறந்த தன் மனைவியைக் கண்டான்; கணை தைத்துக் குருதியொழுக உயிர் நீங்கிக் கிடக்கின்ற மனைவியின் அருகிற்சென்று ''எனது உயிர்போன்றவளே! உனக்கு இத்தீமை நேர்ந்தது என்னையோ!'' என்று மத்தினால் கலக்கப்பட்ட தயிர்போலக் கலக்க முற்று அறிவிழந்து மனஞ்சோர்ந்தான்.

### மறையவன் வேடனை இழுத்துக்கொண்டு மதுரை அடைதல்

பிராமணன் சிறிது தெளிந்து, ''இங்கு ஒரு பெண்பழியை ஏற்றுக் கொண்டவர் யார்?'' என்பதை ஆராயப் புகுந்தான்; அப்பொழுது, அவ்வாலமரத்தின் ஒருபக்கத்திலே ஒரு அம்போடும் வளைத்த வில்லைக் கையிலேந்தித் தனக்கு வாய்க்கும் வேட்டைத்தொழிலினை ஆராய்ந்து எதிரில் நின்ற வேடனைக் கண்டு, ''இவ்வேடன் காலில் செருப்பும், இடையில் வாளொடு கட்டிய கச்சும், கையில் கூரிய அம்பினை ஏறிட்ட வில்லுங் கொண்டு நின்றான்; இவனே என் மனைவியைக்கொன்று பழி பூண்டவன்'' என்று நினைந்து வேடனை நெருங்கி, ''ஏண்டா வேடா! என் மனைவியைக் கொன்றவன் நீயே'' என்று கூற்றுவனைப்போல வாய்த்திறந்து முழக்கஞ்செய்து, ''மன்னவன்மேல் ஆணை'' என்று கூறி, மன்னவன் ஆணையாகிய பாசத்தை வீசி வேடனை வலிந்து இழுத்துக்கொண்டும், இறந்துபோன தன் மனைவியைத் தனது முதுகி லிட்டுக்கொண்டும், குழந்தையைத் தன் அரையின் பக்கத்தில் அணைத் துக்கொண்டும், தாயின் முலைப்பாலை விரும்பி அழுகின்ற குழந்தை யைக் காணும்தோறும் கண்ணீர் சோர விம்மி அழுதுகொண்டும் விரைந்து சென்று மதுரையை அடைந்தான்.

### அந்தணன் அரண்மனை வாயிலிலே நின்று முறையிடல்

பிறகு, பிராமணன் பாண்டியனுடைய அரண்மனை வாயிலை வந்தடைந்து வேடனை முன்னே விட்டுத் தன் மனைவியின் உயிரற்ற உடலை எதிரே கிடத்திப் பாண்டியனின் அமைச்சர் முதலியோர் கேட்ப அவர்கட்கு எதிரே கையை மேலே ஒச்சிக் கண்ணீர் பெருக முறையிடா நின்றான்:

''கோமுறை கோடாக் கொற்றவர் ஏறே! முறையேயோ!
தாமரை யாள்வாழ் தண்கடி மார்பா! முறையேயோ!
மாமதி வானேன் வழிவரு மைந்தா! முறையேயோ!
தீமைசெய் தாய்போற் செங்கை குறைத்தாய் முறையேயோ!

வெற்றிமிகுந்த [1] அரசன் உறங்கும்போதும் அவனுடைய அருளாணையானது உலகமுற்றும் தருமநெறி வழுவாமல் காக்கப்படும் என்பார்கள் பெரியோர்கள். அவ்வாணை இவ்வேடன் செய்த கொலையைக் காவாவிடத்து என்ன பயனுடைத்து'' என்றான்.

### காவலர் அரசனிடம் அந்தணன் முறையீட்டைக் கூறல்

வாயிற் காப்போர் பாண்டியன் முன் சென்று, ''அரசே! நம் அரண்மனை வாயிலின் பக்கத்தில் ஒரு பிராமணன் உயிரிழந்த தன் மனைவியின் உடலை எடுத்து வந்து அங்குப்போட்டு அவனைக் கொலை செய்தானென்று ஒரு வேடனை முன்னே விட்டுத் தனியே வருந்து கின்றான்'' என்றனர். அதனைக் கேட்டலும் பாண்டியன் அஞ்சி, ''என் வெண்கொற்றக் குடை நன்றாய் இருந்தது! என் செங்கோல் குடிகளுக்கு [2] ஐவகை அச்சமும் உண்டாகாமல் அவற்றைப் போக்கி ஆட்சிபுரியும் முறையும் நன்றாய் இருந்தது! நாடு வறுமையில் மூழ்காமல் முயற்சியுடன் தாங்கும் பொறையும் நன்றாய் இருந்தது!'' என்று தன்னை வெறுத்துக்கொண்டு வெளியே வந்தான்.

---

1 இங்கு, ''உறங்கு மாயினு மன்னவன் தன்னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்'' என வரும் சீவக சிந்தாமணி அடிகள் கருதற்பாலன,

2 ஐவகை அச்சம் - இஃது அரசராலும், அரசன் தமராலும், பகைவராலும், கள்வராலும், ஏனை உயிர்களாலும் உண்டாகும்

மறையவன் பாண்டியனிடம் முறையிடுதல்

அந்தணன் வந்து நிற்கும் நிலைமையினைக்கண்ட பாண்டியன் உள்ளம் மெலிந்து அவனை நோக்கி, ''ஐயா! நீ ஏன் வருந்துகின்றனை? உனக்கு நேர்ந்த துன்பம் யாது? சொல்லக்கடவாய் என்றான். அம் மறையோன் மன்னனை நோக்கி, ''புகழ் அமைந்த நீதியுள்ளவனே! நான் இன்று இவளை அழைத்துக்கொண்டுவந்து ஒரு ஆலமர நிழலில் இருத்திவிட்டுத் தண்ணீர் கொண்டுவரச் சென்றேன்; தண்ணீரினை முகந்துகொண்டு யான் வருவதற்குள் இச் சிலைவேடன் இவளைக் கொன்றுவிட்டு அருகே நின்றுகொண்டிருந்தான்'' என்றான். அப் போது மறையவன் கூறிய அச்சொற்கள் உலையிலிட்டுக் காய்ச்சிய வேல்போல் பாண்டியனின் செவிகளில் புகுந்தன.

வேடன் பதில் கூறல்

பாண்டியன், அந்தணன் சொல்லையுங்கேட்டு வேடனை நோக்கி னான். உடனே அவ்வேடன் அரசனை வணங்கி நின்று, ''எந்தையே! அரசர் பெருமானே! நாயிலும் கடைப்பட்டவனாகிய யான் இன்று இளைப்பாறும் பொருட்டு அந்த ஆலமரத்தின் அடியில் ஒருபக்கத்தில் வந்து நின்றேன்; நான் இவளைக் கொலை செய்தவன் அல்லேன்;'' என்றான். அதற்கு எதிர் நின்ற அமைச்சர்கள், ''ஆயின், இவள் உடலிலே அம்பு தைத்து உருவியது எங்ஙனம்?'' என்று வினவினர். வேடன், "ஐய! இந் நிகழ்ச்சியை உண்மையாகவே நானொன்றும் அறியேன்'' என்று கூறினான்.

அமைச்சர் வேடனைப் பலவாறு தண்டித்து உண்மை வினாதல்

அதுகேட்ட அமைச்சரும் பிறரும், ''இவ்வேடன் இக்கொலை யினைச் செய்தவன் யானல்லேன் என்று சொல்வதன்றி யான் செய் தேன் என்று உண்மை கூறும் தகுதியை உடையவனோ? இவன் கூறும்சொல் உண்மையாகுமோ? இவனை மிகத் தண்டித்தாலன்றி உண்மை சொல்லான்'' என்று ஒருசேரக் கூறினர். அரசனும், ''அப்படியே செய்யுங்கள்'' என்று ஆணை தந்தான். தண்டிப்பவர்கள்

---

பயமாம். இதனை, ''மாநிலங்கா வலனாவான் மன்னுயிர்காக் குங் காலைத், தானதனுக்கிடையூறு தன்னால்தன் பரிசனத்தால், ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரால் உயிர்தம்மால், ஆனபயம் ஐந்துந் தீர்த்(து) அறங்காப்பான் அல்லனோ?'' என வரும் திருத்தொண்டர் புராணச் செய்யுளால் அறியலாம்.

வேடனைப் பலவாறு தண்டித்துக் கேட்டனர். குற்றமற்ற அவ் வேடன் முன்பு சொன்ன சொல்லினின்றும் சிறிதும் பிறழாமலே சொல்லி, ''இன்னும் நன்ருக ஆராயுங்கள்'' என்று கூறினன். இதை யன்றி அவன் வேறு யாது செய்ய வல்லன்?

**அரசன் அறநூலை ஆராயவேண்டும் என்றல்**

அப்பொழுது பாண்டியன், ''இவன் கடுந்தண்டத்திற்கும் சிறிதும் அஞ்சுகின்றனில்லை; இவன் கூறுகின்ற மறுமொழியும் வேறுபாடின்றி ஒன்றேயாயுள்ளது; இவன் முகத்திலே சிறிதும் கொலைக்குறிப்புத் தோன்றப்பெற்றிலது; தனக்குப் பகைவரோ, அன்றி விலங்கோ, பறவையோ, வழியில்வந்த இப் பார்ப்பனியைக் கொல்லுதலால் இவனுக்கு வரும் பயன்யாது? இக்கொலையினைப் புரிந்தவர் இவ் வேடன்ருனே? அன்றிப் பிறரோ? யாரோ? அல்லது வேட்டை யாடுவோர் விலங்கினை எய்த குறிப்பினின்றும் தப்பிய அம்புதான் தைத்தலால் இவள் இறந்தனளோ? ஒன்றும் அறிந்திலேன்'' என்று நினைத்து, ''இன்னும் இஃது அறநூலால் ஆராய்ந்து தெளியத் தக்கது'' என்ருன். உடனே அமைச்சர்கள் அவ்வறநூலை ஆராய்ந்து ''அரசே! இது நூலாராய்ச்சியாலே தெளியத் தக்கதன்று; தெய் வத்தினுலே தெளியும் நெறியினை யுடையது'' என்றனர். அதனைக் கேட்ட பாண்டியன் வேதியனை நோக்கி நான் இதனைத்திர ஆராய்ந்து உனது மனக்கவலையை ஒழிப்பேன்; நீ சிறிதும் அஞ்சற்க! இப்போது உன் மனைவியின் ஈமக்கடன்களை முடித்துக் கொண்டுவருக'' என்று போக்கிவிட்டு வேடனைச் சிறையிட்டான்.

**பாண்டியன் சோமசுந்தரக்கடவுளிடம் முறையிடுதல்**

பின்பு பாண்டியன், மனைவிக்குரிய ஈமக்கடன்களைச் செய்து முடித்துத் திரும்பிவந்த மறையோனைத் தன் அரண்மனைவாயிலே இருக்கச் செய்தான்;[1] தனது குடிக்கு ஒரு குலதெய்வமாக எழுந் தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று வணங்கி, ''வெள்ளி மன்றினுள் ஆடும் மணியே! இவ்வேடன்தான் அப் பார்ப் பனியைக் கொன்ருனே? அல்லது பிறர் வேறு காரணத்தால் கொன் றதோ? இதனை அறநூல்களால் அளந்து அறிய முடியவில்லை; உமது திருவருளினுலே அடியேனது குறைவுதீரத் தெளிவித்தருளவேண்டும்'' என்று பிரார்த்தித்தான்.

---

1 இங்கு, அந்தணன் ஆசௌசி ஆதலால், அரசன் அவனைத் தன்னுடன் சிவாலயத்திற்கு அழைத்துச் செல்லாது தன் அரண்மனை வாயிலில் இருக்கச் செய்தான் என்க.

மன்ருடு மணியே! இம் மறவன்ருன் பார்ப்பனியைக்
கொன்ருனே? பிறர்பிறிதாற் கொன்றதோ? இதுஅறநூல்
ஒன்ருலும் அளப்பரிதாக் கிடந்ததால்; உன்னருளால்
என்ருழ்வு கெடத்தேற்ருய் என்றிரந்தான் (அவ்வேலை).

அப்போது, ஆகாயத்தினின்றும், "பாண்டியனே! இத் திரு நகரத்தின் புறத்தே ஒருசார் செட்டித்தெருவிலுள்ள ஒரு வீட்டிலே இன்றிரவு திருமணம் நடைபெறும்; அங்கு அம் மறையவனேடு நீ ஒருசேர வருவாயாக; உன் உள்ளம் தெளியாத மாறுபாட்டினை யெல்லாம் தெளியும்படி செய்விப்போம்" என்று ஒரு அசரீரி வாக்கு எழுந்தது. அத் திருவாக்கினைக் கேட்டுப் பாண்டியன், தன் கடை வாயிலுள்ள அந்தணனேடும் ஒருங்கு கூடிப் பகற்பொழுது கழிந்து மாலைப் பொழுதின் இருளில், தான் வேறுவேடம்பூண்டு அக்கலியாண வீட்டிற்குச் சென்று ஒருவரும் அறியாமல் ஒரு பக்கத்தில் இனிதே இருந்தனன்.

**இயமதூதர்களின் பேச்சை அரசனும் அந்தணனும் கேட்டல்**

அப்பொழுது சோமசுந்தரக் கடவுளின் திருவருளால், அங்கே பாண்டியனும் மறையோனும் கேட்குமாறு, கூற்றுவனல் அனுப்பப் பட்ட எமதூதர் இருவர் உரையாடிக்கொண்டிருந்தது காதில் விழுந்தது. ஒருவன், "இன்றே இங்கு இம் மணமகன் உயிரைக் கொண்டு வரும்படி பெரிய எருமைக் கடாவாகிய மலையிலேறும் நம் தலைவன் கூறிய ஆணையால் இவனுயிரைக் கவர்வது எங்ஙனம்? இவன் உடலின்கண் ஒரு பிணியும் இல்லையே! ஒரு காரணமுமின்றி ஒருயிரைக் கொள்வது இயல்வதன்றே! இதற்கு யாது செய்வோம்" என்று வினவ, அதற்கு மற்றவன், "இன்றைப் பகலிலே ஆலமரத்தின்கண் முன்னரே சிக்கிக் கிடந்த அம்பினை அதன் கீழிருந்த பார்ப்பனிமீது காற்றினல் வீழ்த்தி எங்ஙனம் அவளுயிரைக் கவர்ந்தோமோ அவ்வாறே[1] இப்பொழுது புறத்தே நின்ற கன்றினையீன்ற பசுவினை

---

1 இங்கு இன்னும் எமதூதர், 'அயோத்தியில் இரகுவின் புதல்வனும் தசரதனின் தந்தையும் ஆகிய அசமகாராசன், விதர்ப்பநாட்டு மன்னனுகிய போசன் மகள் இந்துமதியை மணந்து வாழ்ந்துகொண்டிருக்கும்போது, ஒரு நாள் ஆகாயத்திலிருந்து நாரத முனிவர் வீணையில் அணிந்திருந்த பூமாலை காற்றினல் இந்துமதியின்மேல் விழ அவள் இறந்தனள் என்ற ஒரு பழங்கதையினையும் கூறியதாக' நம்பி திருவிளையாடல் கூறுகின்றது. இஃது இரகு வம்சம் என்ற நூலில் கண்டது. இதனை, "நன்னுள் மதியக் குடையோன் குலோத்துங்கன் நாகை

இம் மணவிழாவின் ஆரவாரத்தினாலே கயிற்றை அறுத்துக்கொண்டு வெருண்டோடச் செய்து, இவனுயிரைக் கவர்வோமாக'' என்றான். இம் மொழிகளைக் கேட்ட பாண்டியன், அந்தணனைப் பார்த்து ''இந்த வார்த்தையைக் கேட்டாயோ'' என்றான். அதற்கு அம் மறையவன், ''இம் மணமகன் இங்குக் கூறியபடியே இறந்தால் என் மனைவி இறந்ததும் அப்படியேதான். ஆகையால், இந் நிகழ்ச்சியைக் காண்பேன்'' என்று கூறிப் பாண்டியனோடும் ஒரு சேர இருந்தனன்.

மணமகன் பிணமகனாதல்

மணமகன் இல்லத்தில் அவனது நெருங்கிய சுற்றத்தார் யாவரும் வந்து சேர்ந்து ஒல்லென்னும் ஒலியுடன் மணவினையைத் தொடங்கினர். அப்போது பல இசைக் கருவிகள் ஒருங்குடன் பேரொலி கொண்டு முழங்கின. இங்ஙனம் முழங்கி எழுந்த ஓசையால் அங்குக் கட்டியிருந்த ஒரு பசு வெருண்டு அலறிக் கயிற்றை அறுத்துக்கொண்டோடி மணமகனை முட்டித் தள்ளியது. அவன் இறந்தான். [1]மணமகனே பிணமகனாகவும், மணப்பறையே பிணப்பறையாயும், மங்கல மகளிரின்வாழ்த்தொலியே அழுகையொலியாயும் மாறிமுடியக்கணப் பொழுதினுள்ளே பிறந்து இறக்கின்ற [2]இவ்வுடலினாலே பெறற்பாலதாகிய பயனை அறிவுடையவரே பெறுவர். அறிவு சிறிதும் இல்லாதவர்க்கு அப்பயன் எய்தல் சிறிதும் இல்லையாம்.

மணமகனே பிணமகனாய் மணப்பறையே பிணப்பறையாய்
அணியிழையார் வாழ்த்தொலிபோய் அழுகையொலி யாய்க்கழியக்
கணமதனிற் பிறந்திறும்இக் காயத்தின் வரும்பயனை
உணர்வுடையார் பெறுவர்;உணர்(வு) ஒன்றுமிலார்க் கொன்றுமிலை.

---

வெற்பில், பொன்னாள் அயோத்தி யில்உண் டாயபா வம்புவனத்து முண்டோ' அந்நாளும் பெண்பழி கொண்டது மாலையென்(று) ஆருஞ் சொல்வார், இந்நாளும் பெண்பழி கொள்ளஇம் மாலை எதிர்ப் பட்டதே'' என வரும் குலோத்துங்க சோழன் கோவைச் செய்யுளாலும் அறியலாம்.

1. இங்கு, "மன்றங் கறங்க மணப்பறை யாயின, அன்றவர்க் காங்கே பிணப்பறையாய்ப் - பின்றை. ஒலித்தலும் உண்டாமென்(று) உய்த்துபோ மாறே, வலிக்குமா மாண்டார் மனம்'' எனவரும் நாலடியார்ச் செய்யுளின் பொருளும் கருதற்பாலது.

2. ''மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயம், ஆனிடத் தைந்து மாடும் அரன்பணிக்காக அன்றோ'' (சிவஞான சித்தியார்) எனவும். ''பெரும்பற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்

மறையவன் அதனைக் கண்டு, "[1]என்ன காரியம் செய்து விட்டேன்!" என்று கூறி இரங்கித் தன் மனைவி இறந்ததனால் உண்டாகிய துன்பத்தினும் மிக்க துன்பத்தைக் கொண்டான். பாண்டியன் அவனோடு தனது மாளிகையை அடைந்து அமைச்சர்களுக்கும் ஏனையோர்க்கும் இதனைக் கூறினான்.

பாண்டியன் யாவரையும் அன்புடன் அனுப்புவித்தல்

பின்பு குலோத்துங்க பாண்டியன் அந்தணனை நோக்கி, "நீ இன்னும் ஒரு கலியாணம் செய்துகொள்வாயாக" என்று அரிய பொருளை நிறையக் கொடுத்து, "செல்க" என்று விடை கொடுத்தனுப்பிவிட்டுச் சிறைச்சாலையின்கண் மனக் கவலையோடும் கிடந்த வேடனை விடுவித்து, அவனைத் தன் அருகில் அழைத்து, "உண்மை அறியாமல் யாம் செய்த தண்டத்தைப் பொறுத்துக்கொள்ளக் கடவாய்" என்று கூறி, அவன்மேல் அருள்சுரந்து அவனுக்கு வேண்டுவனவற்றை மிகவும் அளித்து அவன் இருப்பிடத்திற்குப் போக விடுத்தான்.

அதன்பின்பு, குலோத்துங்க பாண்டியன் திருக்கோயிலை அடைந்து சோமசுந்தரக் கடவுளின் திருமுன் வணங்கி நின்று, "எம்பெருமானே! தேவரீர் பாவியேன்பொருட்டுப் [2]பழியஞ்சு நாதராய் இருந்தீர்! என் தந்தையாகிய உமக்கு நான் செய்யத் தக்க கைம்மாறு ஒன்று உளதோ?" என்று பேரன்போடு புகழ்ந்து பன்முறை துதித்து விசேட பூசை செய்வித்து, உலகினுக்கு ஓர் உயிராய் இருந்து அரசியற்றினான்.

செய்யுள் — 44
ஆகச் செய்யுள் —1533

---

லாம் பிறவா நாளே" (அப்பர் தேவாரம்) எனவும் வருவனவற்றால் இங்கு உடலால் வரும் பயனை அறிக.

1. என்ன காரியம் செய்துவிட்டேன் என்றது குற்றமில்லாத வேடன்மேல் இவ்வடாத பழியைச் சுமத்தி அவனைத் தண்டிக்குமாறு செய்துவிட்டேனே என்று கழிந்ததற்கு இரங்கியதைக் குறிக்கும்.

2. இங்கு, "ஒவமே யன்னாள் உயிர் விற்றுப் பெண்பழிகொள், பாவமே பாவம் பழியஞ்சுஞ் சொக்கருக்கே" என வரும் மதுரைக் கலம்பக அடிகள் கருதற்பாலன.

# 26. மா பாதகம் தீர்த்த படலம்

## தாயிடம் இன்பம் நுகர்ந்த தனயன்

குலோத்துங்க பாண்டியன் புவிமுழுதும் தனி அரசு புரிந்துவரும் நாளிலே, அவந்தி நகரத்தில் ஒரு பிராமணன் வாழ்ந்து வந்தான். அவனுக்கு மனைவி என்னும் பெயர் மட்டுங்கொண்டு மனைமாட்சி சிறிதுமின்றித் திருமகளும் இரதியும் மட்பாவையும் விரும்பத்தக்க ஒப்பற்ற அழகினைப்பெற்ற ஒருத்தி இருந்தாள். அவளிடத்து மகன் என்ற ஒரு கொடிய பாவி பிறந்தான். அவன் கொலை முதலிய கொடிய பாவங்களாகிய சரக்குகளை ஏற்றிய மரக்கலம்போல் இளமை செழிக்க வளர்ந்து வந்தான். அவனுக்குப் பலகோடி மன்மதர்கள், பலகோடி விற்களை வளைத்துப் பலகோடி கொடிய [1]மலர்க்கணைகளைப் பூட்டிப் பலகோடி [2]விகாரங்களைக் கூட்டி எய்தார்களோ? யாம் அறியோம்.

> கோடி கோடி அடுஞ்சிலை கோட்டியே
> கோடி கோடி கொடுங்கணை பூட்டியே
> கோடி கோடி விகாரமுங் கூட்டியே
> கோடி கோடி அனங்கர்எய் தார்கொலோ?

மிக்க இளமைப் பருவமுடைய உடலைப் பெற்றவனாகிய அவன் கட்டுக்கடங்காத காமமும் வலிய தீவினையும் [3]நிறையாகிய கட்டினை விடுவித்து இழுத்தலால் தன்னைப் பெற்று வளர்த்த தாயினையே விரும்பினான்.

---

1. மலர்க்கணை - மலராகிய அம்பு; இது தாமரை, மா, அசோகு, முல்லை, நீலோற்பலம் என்னும் ஐந்து மலர் அம்புகளாம்.

2. விகாரங்கள் - சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம் என்னும் அவத்தைகள். சுப்பிரயோகம் - சொல்லும் நினைவும் மாறுபடுதல்; விப்பிரயோகம்-பெருமூச்செறிந்து வருந்துதல்; சோகம் - வெதும்புதல், உண்பன தெவிட்டல்; மோகம் - வருந்துதல் சொற்பல பிதற்றல்; மரணம்-அயர்த்தல், மயங்கல். இவை முறையே தாமரை, மா, அசோகு, முல்லை, நீலோற்பலம் என்னும் ஐந்து கணைகளால் வருவனவாகும்.

3. நிறை - இஃது ஆண் மகனுக்குரிய குணங்களில் ஒன்று; மனத்தை நன்னிலையில் நிறுத்தல்.

சிவ சிவ

# ‘ குமரகுருபரர் ’

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

ஸ்ரீ லஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களின் அருளாணையின் வண்ணம் வெளிவரும்

சமய இலக்கியத் திங்கள் இதழ்

## சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆயுட் சந்தா | ( உள்நாடு ) | ரூ. | 100—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 125—00 |
| ஆண்டுச் சந்தா | ( உள்நாடு ) | ரூ. | 7—50 |
| ,, | ( ஸ்ரீலங்கா ) | ரூ. | 10—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 12—00 |

## விளம்பர கட்டண விகிதங்கள்

| | | |
|---|---|---|
| அட்டை பின்பக்கம் 2 வண்ணங்கள் | ரூ. | 150—00 |
| முன் அட்டை உள்பக்கம் | ரூ. | 125—00 |
| பின் அட்டை உள்பக்கம் | ரூ. | 100—00 |
| உள் முழுபக்கம் | ரூ. | 60—00 |
| உள் அரைப்பக்கம் | ரூ. | 30—00 |

## ஸ்ரீ காசிமடத்தின் புதிய வெளியீடுகள் :-

| | | |
|---|---|---|
| திருவருட்பயன் | (விளக்க உரையுடன்) | விலை ரூ. 1—50 |
| நீதிநெறி விளக்கம் | ,, | விலை ரூ. 1—50 |
| உண்மை நெறி விளக்கம் | ,, | விலை ரூ. 0—75 |
| கந்தர்கலி வெண்பா | ,, | விலை ரூ. 1—50 |
| உண்மை விளக்கம் | ,, | விலை ரூ. 1—00 |
| திருவுந்தியார் | ,, | விலை ரூ. 1—25 |
| கொடிக்கவியும் வினுவெண்பாவும் | ,, | விலை ரூ. 0—75 |
| திருக்களிற்றுப்படியார் | ,, | விலை ரூ. 1—25 |
| திருக்குறள் ஒரு பொதுமறை | | விலை ரூ. 3—00 |
| மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ்-கருத்தரங்கக் கட்டுரைகள் | | விலை ரூ. 3—00 |
| திருவாசகம்-ஆங்கில மொழிபெயர்ப்பு (கோ. வன்மீகநாதன்) | | விலை ரூ. 15—00 |
| தொல்காப்பியம்-நன்னூல்-எழுத்ததிகாரம் (விததுவான் க. வெள்ளைவாரணனுர்) | | விலை ரூ. 10—00 |
| திருவருட்பயன் - நிரம்ப அழகிய தேசிகர் உரையும் திரு. க. வெள்ளைவாரணனுர் எழுதிய உரை விளக்கமும் | | விலை ரூ. 5—00 |
| திருவிளையாடற் புராணம் (மதுரைக் காண்டம் மட்டும்) | | விலை ரூ. 4—00 |

ஸ்ரீ காசிமடம் வெளியீடுகள் ரூ. 50/-க்கு மேல் பெறும்
விற்பனையாளர்கள் அன்பர்கட்கு 20% கழிவு உண்டு.

ரூ. 1000 க்கு மேற்பட்ட ஆர்டர்களுக்கு அனுப்புகைச்செலவு இலவசம்

முகவரி :- நிர்வாக ஆசிரியர், ‘ஸ்ரீகுமரகுருபரர்’
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் அ. கு. எ. 612 504
(தஞ்சை மாவட்டம்)

